# நீங்கள் நிம்மதியாக உறங்க வேண்டுமென்பதற்காக
# நாங்கள் உறங்காத இரவுகள் பல.

ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களின் முன்னோடிகளான சுந்தரம்-கிளேட்டனுக்கு பாதுகாப்பு என்பது ஒரு அர்த்த மற்ற உறுதிமொழி அல்ல. எங்கள் சாதனங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிப்பதற்கேற்ப உருவாக்கப்பட்டவை.





ஆம், இன்று இந்நாடு முழுவதிலும் இலட்சக்கணக்கானவர்கள் தங்கள் அன்புக்குரியவர்களான ஆயிரக்கணக்கான பஸ்/லாரி ஓட்டுபவர்கள், பயணிகள் தங்களிடம் பத்திரமாகத் திரும்பி வந்து விடுவர் என அமைதியுடன் நம்பிக்கையோடு உறங்குகின்றனர். சுந்தரம்-கிளேட்டனில், மிகவும் தனித்தன்மை வாய்ந்த இத் துறையில் முன்னோடிகளான நாங்கள், இந்த நம்பிக்கையை அளிக்கின்றோம் (அதிலிருந்து சாலைப் பாதுகாப்பின் புதியதோர் முறை உருவாகிவிட்டது.)

இன்று, இந்தியாவிலுள்ள ஒவ்வொரு ஹெவி-ட்யூடி வண்டியிலும் எங்களுடைய காற்றுத் தடை உபகரணங்கள் அசல் உறுப்புகளாகப் பொருத்தப்பட்டுள்ளன. இத்துடன் நாங்கள் இருந்துவிடமாட்டோம் உங்களது பாதுகாப்பு எங்களுக்கு மிகப் பெரியதொரு பொறுப்பு. (அதற்காக நாங்கள் பல இரவுகள் உறக்கமின்றி உழைக்கத் தயாராக உள்ளோம்).

**உங்கள் பாதுகாப்பிற்கு எங்கள் உத்திரவாதம்**

இன்றைய தொழில் நுணுக்க முன்னேற்றம், ஆராய்ச்சி, தரக்கட்டுப்பாடு, தரச்சிறப்புச் சோதனைகள் (உதாரணமாக ஒரு பிரேக்சேம்பர் டயாஃப்ரம் பல லட்சக்கணக்கான தடவைகளுக்குமேல் சோதிக்கப்படுகின்றது) இது போன்ற தொடர்ச்சியான சில வழி முறைகள் மூலம் நாங்கள் பிரேக் சாதனத்தை மட்டும் அளிக்க வில்லை, உங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிக்கும் ஒரு சிறந்த சாதனத்தையே அளிக்கின்றோம்.

**நாங்கள் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றோம்— அதனைப் பாதுகாக்கவும்**

CD TVS அளிக்கும் முழுமையான காற்று மற்றும் காற்று-உதவி கொண்ட பிரேக் சாதனங்களின் உறுதியான பாதுகாப்பு எப்பொழுதும் உங்களுக்குக் கிடைப்பதற்கு உங்கள் சாதனத்தை முறையாகப் பராமரியுங்கள். மற்றும் எப்பொழுதும் அசல் CD-TVS உறுப்புகளையே வாங்கி உபயோகியுங்கள். இதனை அலட்சியம் செய்யவேண்டாம். உங்கள் நன்மைக்காகத்தான் சொல்கின்றோம்.

**சுந்தரம்-கிளேட்டன் லிமிடெட்**
பாடி, சென்னை 600 050

உங்கள் பாதுகாப்பு
எங்கள் தொழில்




SAA SCL 2587





# காப்பியடிப்பது எங்கள் பிறப்புரிமை!

பரீட்சைகளைப் பொருத்தவரை மீரட் கல்லூரிகளைப் போல் வசதியானவை கிடையாது. தாராளமாகக் காப்பி அடிக்கலாம். பரீட்சை ஹாலில் புத்தகங்களை நிதானமாகப் பார்க்கலாம். விடைகளைக் கண்டுபிடித்துக் கொடுக்க நண்பர்களையும் அழைத்துச் செல்லலாம்.

உ.பி.யின் 53 கல்லூரிகளிலும் மீரட் முன்னுதாரணம் பின்பற்றப்படுகிறது.

சட்டப் பரீட்சையில் என்ன ஆயிற்று தெரியுமா? புத்தகங்களை வைத்துக் கொண்டும் விடைகளைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சிலர் அட்வகேட்களை ஹாலுக்கு அழைத்து வந்தனர்.

வருமானவரி சட்ட பேப்பருக்கு என்ன செய்தார்கள் தெரியுமா? டாக்ஸியில் இன்கம்டாக்ஸ் ஆபீஸுக்குச் சென்று அங்கேயே விடைகளைக் கேட்டு எழுதிக் கொண்டு வந்தார்கள்.



போலீஸ் வந்தால் பெரிய கலவரம் ஏற்படும் என்று ஆசிரியர்கள் இதைப் பற்றி மூச்சே விடுவதில்லை.

ஒரு கல்லூரியில் பரீட்சை முடிந்ததும் விடைத்தாள்களைத் திரட்டிய ஆசிரியருக்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. ஒரு மாணவன், விடைத் தாள்களில் நோட்ஸ்களிலிருந்து உரிய பக்கங்களைப் பிய்த்து எடுத்து ஒட்டியிருந்தான் சிறு குறிப்பும் எழுதியிருந்தான்: ''எல்லோரும் காப்பி அடிக்கிறார்கள். இது வீண் கால விரயம். என் ஐடியா தான் சிறந்தது. இதற்காகக் கூடுதலான மார்க்குகள் தர வேண்டும். உங்களால் முடியா விட்டால் துணை வேந்தருக்கு என் பேப்பரை அனுப்புங்கள். அவராலும் அதிக மார்க் தர முடியா விட்டால் இதைப் பல்கலைக் கழக வேந்தருக்கே அனுப்பவும்!''

ஆதாரம்: ஹிந்துஸ்தான் டைம்ஸ்.

# ராஜ்ய சபையில் ஆர்.எஸ்.எஸ்!

அரசாங்கத்தில் ஆர். எஸ். எஸ்.ஸின் செல்வாக்கு இருக்கிறதோ இல்லையோ ராஜ்ய சபையில் உள்ள எல்லா மேஜை நாற்காலிகளிலும் ஆர்.எஸ்.எஸ். என்று தான் எழுதப்பட்டு இருக்கிறது. R. S. S. என்பது ராஜ்ய சபா செக்ரடேரியட் என்பதைக் குறிக்கும்!

# வட்டங்களுக்குள் ●●● முக்கோணம் △

சிறிது துண்டிக்கப்பட்ட மூன்று கறுப்பு வட்டங்களைக் கொண்டு ஒரு வெள்ளை முக்கோணத்தை உருவாக்க முடியுமா?

விடை :





# ஒரு ஸ்பூன் சர்க்கரையே போதுமே!

ஜகஜீவன் ராம் 'டீ'க்கு மூன்று ஸ்பூன் சர்க்கரை போட்டுக் கொள்கிறார் என்று 'ஸ்டேட்ஸ்மன்' தினசரியில் ஒரு துணுக்கு பிரசுரமாகியிருந்தது.

இரண்டுநாள் கழித்து 'ஆசிரியர் கடிதம்' பகுதியில் ஜகஜீவன் ராமின் கடிதம் வந்தது: நான் மூன்று ஸ்பூன் சர்க்கரை போட்டுக் கொள்வதில்லை. ஒரே ஒரு ஸ்பூன்தான்.



— கழுகு

# இந்தியைத் திணிக்காதீர்கள்! ஒற்றுமையைக் குலைக்காதீர்கள்!

## முரசொலி மாறன்

(மாநிலங்களவையில் பேசியதன் சுருக்கம்)



ஐயா! இந்த நாட்டில் இப்போது ஒரு இந்தி ஆக்கிரமிப்பு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ரோமானியர்களின் அணிவகுப்பு போல் – இந்தி பேசாத மக்களின் உரிமைகளையும், நலன்களையும் காலில் போட்டு நசுக்கியவாறு. இப்படியொரு வேகமான இந்தி ஏகாதிபத்திய அணிவகுப்பைச் சுதந்திரத்திற்குப் பிறகு இந்த நாடு இதுவரை சந்தித்ததே இல்லை!

–இந்தி பேசாத மக்களுக்கு எதிரான இந்த இந்தி ஆக்கிரமிப்பு எமெர்ஜன்சி காலத்தில் முடுக்கி விடப்பட்டது, வேகம் கூட்டப்பட்டது.

1975ம் ஆண்டு ஜூன் மாதம் 25–ஆம் தேதி 'எமெர்ஜென்சி' பிரகடனம் செய்யப்பட்டது.

அதற்கு மறுநாள் ஜூன் 26ம் தேதியன்று இன்னொருவிதமான 'எமர்ஜன்சி' இந்தி பேசாத மக்கள் மீது பிரகடனம் செய்யப்பட்டது. அன்றைக்குத்தான் உள்துறை அமைச்சகத்தில் ஆட்சி மொழி இலாகா (Department of official language) என்கிற இலாகா தோற்றுவிக்கப்பட்டது.

அதற்கு முன்பெல்லாம் அந்தப் பணியை உள்துறை அமைச்சகத்தில் உள்ள ஒரு சிறு 'டிவிஷன்' செய்து கொண்டிருந்தது.

'மத்திய அரசில் ஆட்சிமொழிக் காரியங்களுக்கு இந்தியின் உபயோகத்தை அதிகரிப்பதுதான்' அந்த இலாகாவின் நோக்கம்.

இப்போது அந்த இலாகா ஒரு செயலாளர், கூட்டுச் செயலாளர், துணைச் செயலாளர் – உள்ளிட்ட 61 அதிகாரிகள் பணியாற்றும் பிரம்மாண்ட அமைப்பாக ஆகிவிட்டது.

இதில் வேடிக்கை என்னவென்றால் மத்திய அரசில் இந்த ஓர் இலாகாதான் மிகவும் திறமையாகப் பணியாற்றுகின்றது.

—அது ஆட்சிமொழி இலாகா அல்ல; அதை இந்தித் திணிப்பு இலாகா என்று சொல்வதே பொருத்தமானதாகும்.

இந்தி திணிக்கப்பட மாட்டாது என்று பிரதமர் கூறுவதில் ஏதாவது பொருள் இருக்குமானால் அந்த ஆட்சிமொழி இலாகாவையே அக்குவேறு, ஆணி வேறாகப் பிரித்து: அதற்கு மூடுவிழா நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்வேன்.

இந்த இலாகா – இதர மத்திய அரசின் அமைச்சகங்கள், இலாகாக்கள், இந்தியா முழுவதிலுமுள்ள மத்திய அரசு நிறுவனங்கள், ஆயுள் காப்பீட்டுக் கழகம், ரிசர்வ் வங்கி போன்ற அனைத்திலும் அவைகளது தொண்டையை நெரிப்பது போன்ற பிடியை வைத்துக் கொண்டிருக்கிறது. காஷ்மீரில் இருந்து கன்னியா குமரி வரைக்கும் ஒருவிதப் பயத்தையும் மரியாதையையும் உத்தரவிட்டுப் பெற்றுக் கொண்டிருக்கிறது.

இந்த இலாகாவின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்காகப் பிற இலாகாக்கள் ஒவ்வொன்றிலும் இந்திப் பிரிவுகள் (Hindi Section) உருவாக்கப் பட்டிருக்கின்றன. அந்தப் பிரிவுகளில் 'இந்தி ஆபீசர்கள்' மொழி பெயர்ப்பாளர்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றார்கள். அரசுடைமையாக்கப்பட்ட நிறுவனங்களும் இதற்கு விதிவிலக்கல்ல.

மேலும் இந்தியாவில் உள்ள பிற இலாகாக்கள் ஒவ்வொன்றிலும் 'ஆட்சிமொழியை அமுல்படுத்தும் கமிட்டி' (Official language Implementation Committee) என ஒன்றும் உருவாக்கப்பட்டிருக்கிறது.

—இந்த அமுல்படுத்தும் கமிட்டி 'விஞ்ஞான, தொழில் நுணுக்க இலாகா (Department of Science and Technology), உர உற்பத்திக் கார்ப்பரேஷன் (Fertilizer Corporation), மருந்துகள் தயாரிக்கும் கம்பெனி (Indian Drugs and Pharmaceutical Ltd.), பென்சிலின் தயாரிக்கும் (Hindustan Antibiotics) முதலிய நிறுவனங்களிலும் நிறுவப்பட்டுச் செயல்பட்டு வருகிறது.

—இவற்றிலிருந்து இந்தக் கமிட்டி எவ்வளவு முனைப்போடு செயல்பட்டு வருகிறது: இந்தி எவ்வளவு வேகமாகத் திணிக்கப்படுகிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

இந்த ஆட்சி மொழி இலாகா அவ்வப்போது 'மத்திய இந்தி சமிதி' (Central Hindi Samiti) என்னும் அமைப்பிலிருந்து அறிவுரைகளைப் பெற்று அதை நிறைவேற்றி வருகிறது.

இந்த சமிதிக்குப் பிரதமர்தான் தலைவர். இதில் எந்தத் தென்னிந்திய முதலமைச்சரும்

அங்கம் வகிக்க வில்லை. இது முழுக்க முழுக்க இந்தி பேசுவோரைக் கொண்ட கமிட்டி யாகும்.

## இந்தி திணிக்கப்படுவதற்கு இதோ ஆதாரங்கள்:

என்னதான் இந்தி திணிக்கப்படவில்லை என்று பிரதமர் கூறியபோதிலும் இந்தி எவ்வாறு முனைப்புடன் திட்டமிட்டுத் திணிக்கப்படுகிறது என்பதை உள்துறை அமைச்சகம் வெளியிட்டிருக்கும் ஆட்சி மொழி இலாகாவின் ஆண்டறிக்கை விளக்குவதாக இருக்கிறது.

அந்த அறிக்கையிலிருந்து படித்துக் காட்ட விரும்புகிறேன். —

''மத்திய இந்தி சமிதி எடுத்த முடிவின்படி இந்தி தெரிந்திராத இந்தி பேசாத ஊழியர்கள் இந்தி வகுப்புகளுக்குச் செல்ல வேண்டுமென்றும், இந்தித் தேர்வுகளை எழுத வேண்டுமென்றும் கட்டாயப்படுத்தப் பட்டிருக்கிறது.''




—''கட்டாயப் படுத்தப்பட்டிருக்கிறது'' It has been made compulsory.......'' என்கிற வார்த்தைகளை நான் கோடிட்டுக் காட்ட விரும்புகின்றேன்.

அதே ஆண்டறிக்கையில் 27—ம் பக்கத்தில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

''இந்தி வகுப்புகளுக்குச் செல்ல வேண்டுமென்று நியமிக்கப்பட்டவர்கள் ஒழுங்காகச் செல்ல வேண்டுமென்றும், தேர்வு எழுத வேண்டுமென்றும் 19—2—1976 தேதியிட்ட உத்தரவின்படி முற்றிலும் கட்டாயமாக்கப் பட்டிருக்கிறது.''

முன்பு வெறும் கட்டாயமாக இருந்தது! 19—2—1976லிருந்து முற்றிலும் கட்டாயமாக (''it has been made absolutely compulsory.........'') ஆக்கப்பட்டிருக்கிறது.

உதாரணமாக, இந்தி வகுப்புகளுக்குச் செல்ல வேண்டும் என்று நியமிக்கப் பட்டவர்கள் இந்தி வகுப்புகளுக்குத் தொடர்ந்து செல்லாவிட்டால் அல்லது தேர்வு எழுதாவிட்டால் என்ன ஆகுமென்று நினைக்கிறீர்கள்?

இதுபற்றியும் ஆண்டறிக்கை மிகத் தெளிவாகக் கூறியிருக்கிறது:

''இந்தி வகுப்புகளுக்கோ, தேர்வுக்கோ செல்லா விட்டால் அது கடமை செய்வதிலிருந்து தவறியதாகக் கருதப்பட்டு ஒழுங்கு நடவடிக்கை மேற்கொள்ளப்படும்.''

இதோ இன்னொரு சம்பவம்:

''1976—ம் ஆண்டு மே மாதம் 26—ஆம் தேதியன்று நடைபெற்ற கேந்திரிய இந்தி சமிதி எடுத்த முடிவின்படி மத்திய அரசு ஊழியர்களுக்கு எப்படி இந்திப் பயிற்சி கட்டாயமாக்கப் பட்டிருக்கிறதோ, அது போல அரசுடைமை யாக்கப்பட்ட நிறுவனங்களில் பணியாற்றும் ஊழியர்களுக்கும் இந்திப் பயிற்சி கட்டாயமாக்கப் பட்டிருக்கிறது.''

அந்த ஆண்டு அறிக்கை மேலும் ஒரு திட்டம் பற்றிக் குறிப்பிடுகிறது:

''இந்தி பேசாத பகுதிகளில் உள்ள மத்திய அரசு அலுவலகங்கள் தங்களது அமைச்சகங்களுக்கும், இலாகாக்களுக்கும் எழுதும் கடிதங்களில் பத்து சதவிகிதத்தை இந்தியிலேயே எழுத வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.''

## இந்தியைக் கற்றுக் கொள்வது ஊழியர்களுக்கே நல்லதாம்

—இதிலிருந்து தமிழ்நாட்டுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறதா? இல்லையா என்பது தெரியவில்லை.

ஆனால் இந்தி பேசாத பகுதிகளில் உள்ள மத்திய அரசு அலுவலகங்கள் — அது தமிழ்நாடாக இருந்தாலும் சரி; கேரளாவாக இருந்தாலும் சரி; மேற்கு வங்கமாக — கர்நாடகமாக இருந்தாலும் சரி— அவைகள் பத்து சதவிகிதக் கடிதங்களை இந்தியிலேயே எழுத வேண்டுமாம்! இது எப்படி சாத்தியமாகப் போகிறது என்று எனக்குத் தெரியவில்லை.

அது மட்டுமல்ல; அமைச்சகங்களில் அல்லது இலாகாக்களில் உள்ள டெபுடி செகரெட்டரி தகுதியுள்ளவர்களும், அதற்கு மேற்பட்டவர்களும்கூட இந்தியில் பணியாற்றும் அறிவைப் பெற வேண்டும்! ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் இது நடைபெற்றாக வேண்டும்— என்று காலவரம்பு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.—நிலைமை இப்படியிருக்க, மாண்புமிகு பிரதமரோ, யாரும் இந்தி படிக்குமாறு கட்டாயப்படுத்தப் படவில்லை, இந்தி திணிக்கப் படவில்லை — என்று கூறுகிறார்.

—மேலே குறிப்பிட்டிருக்கிற செய்தியை மாண்புமிகு பிரதமரின் கவனத்துக்குத் தமிழக நிதியமைச்சர் கொண்டுவந்தார்.

இதற்குப் பிரதமர் என்ன பதில் சொன்னார் தெரியுமா?

அப்படி அந்த ஊழியர்கள் இந்தி கற்றுக் கொண்டால் அது அந்த ஊழியர்களுக்கே நல்லது — என்று பிரதமர் குறிப்பிட்டிருக்கிறார்! —இத்தகைய போக்குக் குறித்து என்ன சொல்வது என்றே புரியவில்லை.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் உச்சகட்டத்தில் இருந்தபோது, உங்களுடைய நன்மைக்காகத்தான் நாங்கள் இந்தியாவில் இருக்கிறோம் — என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.





# கோஸிகின்

● கோஸிகின் 1904ம் ஆண்டு லெனின் கிராடு நகரத்தில் பிறந்தார். இவரது தந்தை ஒரு தொழிற்சாலையில் ''டர்னர்'' வேலை பார்த்து வந்தார்.

● பதினைந்தாவது வயதிலேயே கோஸி கின் செஞ்சேனையில் சேர்ந்தார்.

● பின்னர் லெனின்கிராடு கூட்டுறவு தொழில்நுட்ப கல்விக் கூடத்தில் ஆறு வருடம் படித்தார். அப்படிப் படித்துக் கொண்டே பொதுச் சேவையிலும், அரசியலிலும் தம்மை இணைத்துக் கொண்டார்.

● 1927ம் வருடம் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். இவரது உழைப்பையும், திறமையையும் கண்டு இவரது மேல் படிப்புக்கும் கட்சியே உதவியது. நெசவாலை தொழில் நுட்பத்தில் பட்டம் பெற்றார் கோஸிகின்.

● முதலில் இவர் போர்மேனாகத்தான் இருந்தார். பிறகு படிப்படியாகப் பல பதவி உயர்வுகள். கட்சியிலும் பதவி உயர்வு பெற்று வந்தார்.

● யுத்தத்தின் போது மாநிலப் பாது காப்பு கமிட்டியின் உத்தரவின்படி கோஸி கின் பல தொழிற்சாலைகளை யுத்தத்தில் சேதப் படாதிருக்க நாட்டின் கிழக்குப் பகுதிக்கு மாற்றினார். அது மட்டுமல்ல. அங்கு அவை நன்கு இயங்கவும் வழி செய்தார். குறுகிய காலத்துக்குள் இதைச் சாதித்துப் பெரும் புகழ் பெற்றார்.

● 1960ம் வருடம் கோஸிகின் முதன் முறையாக ருஷ்ய மந்திரிகளுக்குத் துணைத் தலைவராக நியமிக்கப்பட்டார். 1964ம் ஆண்டிலிருந்து இவர்தான் தலைவர் அல்லது பிரதமர்.



✖ கோஸிகின், மொரார்ஜி, பிரஷ்னேவ்
✖ பேத்தியுடன் கோஸிகின்
✖ பேரனுடன்

● பல விருதுகளையும் பட்டங்களையும் பெற்ற கோஸிகின் சமீபத்தில் 75வது பிறந்த தினத்தின் போது order of the october Revolution என்ற மிக உயரிய விருதைப் பெற்றார்.

● குழந்தை உள்ளம் கொண்ட கோஸிகின் குழந்தைகளுடன் இருக்கும் போது குழந்தை யாகவே மாறி விடுவார். தமது பேரன் பேத்திகளிடம் இவருக்கு உயிர்.

● கோஸிகின் இந்தியாவுக்கு வருவது இது ஏழாவது தடவை. முதன்முறை இந்தியா வுக்கு இவர் 1961ம் ஆண்டில் வந்தார்.

''குமார்.''

# இசை உலகில் ஒரு இரத்தினம்!



திரு சுப்பாராவ்

வித்வான்களுக்கு இயன்ற அளவு சன்மானம் கொடுத்து — ஊக்குவிப்பதையும், சங்கீதத்தில் ஈடுபாடு கொண்டுள்ள மக்களுக்கு எவ்வித கட்டணமும் இன்றி இக்கச்சேரிகளைக் கேட்க வாய்ப்புக்களை அளிப்பதையும் முக்கிய குறிக்கோளாகக் கொண்டு தொடங்கப் பட்டது ஸ்ரீராமநாம யக்ஞ மண்டலி.

''வருடாவருடம் ஸ்ரீராமநவமி சமயத்தில் தினத்துக்கு இரண்டு கச்சேரிகள் வீதம் குறைந்த பட்சம் பதினொரு நாட்களுக்குக் கச்சேரிகள் ஏற்பாடு செய்கிறோம். இக்கச்சேரிகள் நடத்துவதற்கான பணத்தை வசதியும், மனமும் படைத்த நண்பர்களிடமிருந்தே நன்கொடையாகப் பெறுகிறோம். நண்பர்களின் பேருதவியும், வித்வான்களின் மனமார்ந்த ஒத்துழைப்பும் இல்லாவிடின் 'ஸ்ரீராமநாம யக்ஞ மண்டலி' இந்த அளவுக்கு வளர்ந்திருக்கவே முடியாது'' என்று குறிப்பிட்டார் இதன் தலைவர் கே. மஹாதேவன்.

Tafe நிறுவனத்தில் உயர்ந்த பதவி வகித்து வரும் இவர் கர்னாடக சங்கீத வளர்ச்சிக்குத் தம்மால் இயன்றவரை சேவை செய்வதையே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டுள்ளார்.

ஒரு சிறந்த சங்கீதக் குடும்பத்தில் பிறந்த இவருக்குச் சங்கீதத்தில் தேர்ச்சி பெற்று வித்வானாக வரவேண்டும் என்று தமது இளவயதில் விருப்பமாம். ஆனால் இவரது தந்தைதான் இவரைச் சங்கீத வித்வானாக ஆவதைவிட இக்கலையின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டுச் சேவை செய்யும் ஒரு promoter ஆக விளங்கவேண்டும் என்று விருப்பம் தெரிவித்தாராம். திரு. மஹாதேவனுக்கு திரு ஜி. என். பியுடன் நீண்ட நாள் தொடர்பு இருந்துள்ளது. ''திரு. ஜி. என். பி. எனக்குத் தெய்வம் மாதிரி'' என்று மஹாதேவன் குறிப்பிட்டார்;

மண்டலியின் இவ்வாண்டுக்கான நிகழ்ச்சிகளில் ஒரு புதுமை கூடுகிறது.

''கர்னாடக சங்கீத வளர்ச்சிக்காக ஆத்மபூர்வமாகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு சேவை செய்து வரும் ஒரு பிரமுகரைத் தேர்ந்தெடுத்து எங்களது மண்டலியின் சார்பில் 'சங்கீத வித்யா ரத்னா' என்ற விருதை இவ்வாண்டிலிருந்து வழங்கலாமென்று முடிவு செய்திருக்கிறோம். அப்பிரமுகருக்கு விருதுடன் பொற்சால்வையும் வெள்ளிப் பட்டயமும் வழங்கப்படும். இவ்விருதைப் பெறுவதற்கு சங்கீத. வாத்ய வித்வானாகத்தான் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் கிடையாது. கர்னாடக சங்கீத வளர்ச்சிக்கு எவ்வகையிலேனும் உண்மையான சேவை செய்து வருபவராக இருந்தால் போதுமானது'' என்று குறிப்பிட்டார் திரு மஹாதேவன்.

இவ்வாண்டு சங்கீத வித்யா ரத்னா விருதைப் பெறப் போகிறவர் யார்? ஸ்ரீ சீதாராம கான சபையை 1947ல் தெனாலியில் தோற்றுவித்து, இதுவரை அச்சபாவுடன் தம்மைப் பிணைத்துக் கொண்டு கர்னாடக சங்கீதத்தின் வளர்ச்சிக்கு மிகச் சிறப்பாகச் சேவை செய்து வரும் தெனாலி ஸ்ரீ சுப்பாராவ் அவர்கள்.

எழுபத்தேழு வயதாகும் திரு சுப்பாராவ் ஒரு வழக்கறிஞர். சிறந்த சங்கீதப் பரம்பரையைச் சேர்ந்தவர். 'சங்கீதம் என் ரத்தத்தில் இருக்கிறது. ஆனால் நாக்கில் இல்லை' என்று அவரே தம்மைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சங்கீத வித்வான்களுக்கு ஆதரவும், ஊக்கமும் அளித்து, மக்களுக்கு இலவசமாகச் சிறந்த கர்னாடக சங்கீதக் கச்சேரிகளைக் கேட்பதற்கு வாய்ப்புகளை ஏற்படுத்தியுள்ளார். இப்பணியில் திரு சுப்பாராவ் சந்தித்துள்ள சிரமங்களும், அவரது தியாகங்களும் வார்த்தைகளில் அடங்காதவை. தமது செல்வம் அத்தனையையும் இப்பணிக்காகவே அவர் செலவிட்டுள்ளார். சில சமயங்களில் வித்வான்களுக்குச் சன்மானம் அளிக்கப் பணம் இல்லாமல், வித்வான்களைத் தம் வீட்டில் இருக்கச் செய்துவிட்டு அவர்களுக்குத் தெரியாமல் வெளிக் கிளம்பித் துண்டை விரித்தபடி, தம் நண்பர்களிடம் நன்கொடை வசூலிக்கக் கிளம்பி விடுவாராம்.

ஸ்ரீராம நாம யக்ஞ மண்டலியினர் இவ்வாண்டிலிருந்து இன்னொரு இசைப் பணியையும் தொடங்கியுள்ளனர். 'வட அமெரிக்க சங்கீத அகாடமி'யினருடன் தொடர்பு கொண்டு தமிழ் நாட்டின் சிறந்த வித்வான்களின் கச்சேரிகளை அமெரிக்காவில் நிகழ்த்த இம்மண்டலியினர் உதவுகின்றனர். இத்திட்டத்தின்படி இவ்வாண்டு திருமதி மணி கிருஷ்ணசாமி வட அமெரிக்காவில் சங்கீதக் கச்சேரிகள் நிகழ்த்த விருக்கிறார்.

பேட்டி: ரங்கா.

⌘ ஸ்ரீ ராம நாம யக்ஞ மண்டலியில் எம். எல். வி. கச்சேரி முடியும் தருவாயில் மகாதேவன் நன்றி தெரிவித்துப் பேசுகிறார்.



இந்திராவின்
ஆதிக்கத்துடன் கூடிய
இணைப்பு
முயற்சி
HAPPY BIRTHDAY
CHAVAN



கட்சிக்குள்
பட்டேருக்கு
எதிர்ப்பு
வரிகள்
வரிகள்
வரிகள்
வரிகள்



மது விலக்குச் சட்டத்தைக்
கடுமையாக்கி இருக்கேன்..
குடிக்கிறவங்களைப்
புடிச்சுப் போடுங்க!
புதுவை
ஏம்பலத்தில்
கள்ளச் சாராய
கோஷ்டிகள்
மோதல்




கல்கி

1979 மார்ச் 25
காளயுக்தி பங்குனி 11

மலர்: 37 இதழ்: 34




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# மன்றத்தில் அமளி! மாம்பலத்தில் துமிளி!

"அரசியலில் சரி எது, தப்பு எது?''

—இப்படிக் கேட்டார் இந்திரா காந்தி! அரசியலைப் பொறுத்த மட்டில் அவருக்கு சரி, தப்பு எல்லாம் ஒன்றுதானாம்! ''லெஸ்லா குர்னிகா'' வழக்கு நடந்த போது இந்த விவரம் வெளியாயிற்று.

இந்திரா கொண்டுவந்த நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்கு எதிராக மனக் கசப்பும் வெறுப்புணர்வும் மக்களிடையேயும் தலைவர்கள் பலரிடமும் வளர்ந்தது. இன்று நெருக்கடி நிலை பிரகடனம் ரத்தாகி விட்டது. ஆனால் மனக் கசப்பு, வெறுப்புணர்வு ஆகிய குணங்கள் உள்ளங்களிலிருந்து நீங்கவில்லை. மாறாக வளர்ந்து விட்டிருக்கின்றன. 'அரசியலில் சரி எது, தப்பு எது?' என்ற போக்கு இன்னமும் நீடிக்கிறது.

இல்லாத போனால் யாதவ் மந்திரிசபை கலைக்கப்பட்டிருக்காது. அடுத்து வந்த அமைச்சரவையும் அல்லல்படாது.

'சரண்சிங் வெளியேறியது நாட்டுக்குச் சோதனை என்றால் அவர் மீண்டும் அமைச்சரவையில் சேர்ந்தது மக்களுக்கு வேதனை" என்று கூறுமளவில் ஒரு பட்ஜெட் உருவாகி இராது.

'காப்பி அடிப்பது எங்கள் பிறப்புரிமை' என்ற ரீதியில் மீரட்டில் மாணவர்கள் நடந்து கொள்ள மாட்டார்கள்.

தமிழ்நாடு சட்டமன்றத்தின் நடவடிக்கைகளைப் பல தடவை ஒத்தி வைக்க வேண்டிய அளவுக்கு அங்கு அமளி நடந்திராது.

பழைய மாம்பலம் துமிளிப்பட்டிராது. செஞ்சிக்கருகே நடந்த பள்ளிக் கூடத் திறப்பு விழாவில் வஞ்சமும் வன்முறையும் விளையாடி யிருக்காது.

இவற்றையெல்லாம் பத்திரிகைகளில் படிக்கும்போது பரபரப்பாகவும் சுவாரசியமாகவும் உள்ளன. ஆனால் 'தேசத்துக்கு நல்லதில்லையே' என்ற கவலையும் நல்லோர் மனத்தில் கூடவே எழும்.

ஏன் இவ்வாறெல்லாம் நிகழ்கின்றன ?

''ஜனநாயகப் பண்புகளை நாம் மறந்து விட்டதுதான் காரணம்'' என்கிறார் திரு. க. சந்தானம். அவர் மேலும் சொல்கிறார்:

''ஜனநாயகம் நன்கு செயல்பட நேர்மையான தேர்தல்கள், சட்டமன்றங்கள், பொறுப்புள்ள அரசுகள், பத்திரிகை சுதந்திரம் முதலியன தேவைதான். ஆனால் இவையெல்லாம் இருந்தும் ஜனநாயகப் பண்பு நம்மிடம் இல்லையென்றால் பிரயோஜனப் படாது. அவ்வப்போது ஜனநாயக விரோத சக்திகள் தலைதூக்கவே செய்யும்.''

''ஜனநாயகப் பண்பு என்பதனைச் சற்று விளக்குங்கள்'' என்றால் சந்தானம் கூறுகிறார்:

''எதிர்த் தரப்பினர் மீது வெறுப்பு, விரோதம், கசப்புணர்ச்சி, இவற்றை வளர்த்துக் கொள்ளக் கூடாது. மாற்றுக் கருத்துக்களைச் சகித்துக் கொள்ளக் கற்க வேண்டும், அக்கருத்துக்களைக் கொண்டிருப்போரிடம் நல்லெண்ணத்தை வளர்த்துக் கொள்ளப் பாடுபட வேண்டும். ஆட்சியில் இருப்பவர்கள் செய்யும் சிறுசிறு பிழைகளைக் கூட எதிரணியினர் பெரிதாக்கிப் பிரமாதப் படுத்தக் கூடாது. ஆட்சியிலிருப்பவர் எதிர்த்தரப்பினரை மதித்து மரியாதை தந்து நடத்த வேண்டும்.

''இந்தப் பண்புகளை நாம் பாராட்டாது போனால் சட்டமன்றங்களோ நாடாளுமன்றமோ, அரசோ சரிவர இயங்க முடியாது. ஒருவர் மீது ஒருவர் குற்றம் சுமத்திச் சூழலை நச்சு மயமாக்குவதுதான் கண்ட பலனாக இருக்கும்.''

நாம் விரும்புகிறவர் மீது அன்பு செலுத்துவது எளிது, எதிர் அணியினர் மீது அன்பு செலுத்துவதுதான் சிரமம். அதில் வெற்றி பெறுவதுதான் பேராண்மை.

அந்த மாவீரம் ஜனநாயகத்துக்கு இன்றியமையாதது.

# சுலபமான முறையில் வரிகளைச் செலுத்த ஐ ஓ பி உதவுகிறது.

உங்களுடைய வருமான வரி (அட்வான்ஸ் வரி உள்பட) சொத்துவரி, நன்கொடைவரி போன்ற நேர்முக வரிகளை கீழ்க்கண்ட நகரங்களிலுள்ள எமது கிளைகளில் ஏதேனும் ஒன்றில் செலுத்தி அதற்குரிய ரசீதை உடனடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| சென்னை | தாம்பரம் | திருச்சி |
| கோயம்புத்தூர் | கும்பகோணம் | தஞ்சாவூர் |
| கடலூர் | கரூர் | திருநெல்வேலி |
| திண்டுக்கல் | மதுரை | திருப்பூர் |
| ஈரோடு | நாகப்பட்டிணம் | தூத்துக்குடி |
| இளையாங்குடி | நாகர்கோவில் | ஊத்துக்கோட்டை |
| கமுதி | பொள்ளாச்சி | உளுந்தூர்பேட்டை |
| கீரனூர் | பாண்டிச்சேரி | உத்திரமேரூர் |
| காரைக்குடி | புதுக்கோட்டை | விருதுநகர் |
| காஞ்சீபுரம் | சேலம் | வேலூர் |
| | | பிஸ்ஸாம், கட்டாக் (ஒரிஸா) |

உள்ளூர் செக்குகள் அல்லது டிராப்டுகள் மூலமாக வரிகளைச் செலுத்துவோர் அதற்குரிய அடையாளச் சீட்டுகளைப் (டோக்கன்கள்) பெற்றுக்கொண்டு, செக்குகள் / டிராப்டுகள் காசாக்கப்பட்டதும் ரசீதைப் பெற்றுக் கொள்ளலாம்.



**இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்**

உங்கள் வளர்ச்சிக்கோர் உத்தம நண்பன்

Sista's/IOB/74,A/78/Tam




# வாஸந்த நவராத்திரி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்

[மார்ச் 28—லிருந்து ஏப்ரல் 5—வரை வாஸந்த நவராத்ரி]

பரமேச்வரனுக்கு ராத்ரி ஆராதனை முக்ய மாக இருக்கும் படியாக சிவராத்ரியில் லிங்க மாக உத்பவித்தார். அம்பாளுக்கும் ராத்ரி வழிபாடு விசேஷமாகும். சிவராத்ரி போல் ஒரு நாள் மட்டுமில்லை. ஒன்பது நாள் —ஒன்பது ராத்ரிகளில் அம்பாளுக்கு நவராத்ரி ஆரா தனை செய்கிறோம். இப்படி ஒரே ஒரு நவராத்ரி மட்டுமில்லை. இரண்டு நவராத்ரிகள் இருக் கின்றன.

சாரத நவராத்ரி போலவே, ஸரியாக அதற்கு ஆறு மாஸத்துக்கு அப்புறம், நம் பங்குனி அல்லது சித்திரை அமாவாஸ்யை சேர வஸந்த காலத்தில் ஒரு நவராத்ரி உண்டு வஸந்தத்தில் வருவதால் இதற்கு வாஸந்த நவராத்ரி என்று பேர். கோகுலாஷ்டமியும் சிவராத்ரியும் ஆறு மாஸ இடைவெளிகளில் வருகிற மாதிரியே சாரத வாஸந்த நவராத் ரிகள் அரை வருஷ 'இன்டர்வெல்'லில் வரு கின்றன.

அம்பாள் ஞானாம்பிகையாக ஆவிர்ப் பவித்த வாஸந்த நவராத்திரியின் பூர்த்தி நாளாகிய நவமியன்றேதான் ஸ்ரீராம சந் திர மூர்த்தி அவதரித்திருக்கிறார். வாஸந்த நவராத்திரியில் 'தேவீ தபனம்' என்று பஞ் சாங்கத்தில் போட்டிருக்கிற முடிவு நாளி லேயேதான் 'ஸ்ரீராமநவமி' என்றும் போட் டிருக்கும்.

துஷ்ட சிக்ஷை, சிஷ்ட ரக்ஷை என்ற இரண் டுக்காகவே அவதாரங்கள் ஏற்படுகின்றன. கெட்டவர்களை, கெடுதல்களை அழிப்பது துஷ்ட சிக்ஷை. நல்லவர்களை, நல்லதுகளை வளர்ப்பது சிஷ்ட ரக்ஷை. இதைத்தான் முன்பின்னாக மாற்றி பகவான் கீதையில் ''பரித்ராணாய ஸாதூனாம், விநாசாய ச துஷ் க்ருதாம்'' என்றார். 'அழிக்கிற காரியம் முக் கியமாக ருத்திரனுடையது. தம் காரியம் குறிப்பாகப் பரிபாலனம்' என்பதால் முதலில் ஸாதுக்களைக் காப்பதையும், அப்புறம் துஷ்டர்களை நாசம் பண்ணுவதையும் சொன் னாரோ என்னவோ?

சிஷ்டர்களை ரக்ஷிப்பது என்றால் என்ன? நிறையப் பணம் காசு, அன்ன ஆஹார வாஹ னாதிகளைக் கொடுப்பதா? இதெல்லாம் முடி வில் நன்றாக மாயையில் அழுத்துவதுதானே? ஆதலால் சிஷ்ட ரக்ஷை என்றால் அவர்களுக்கு ஞானம் தருவது என்றுதான் அர்த்தம். முதலில் அவர்கள் ஞானம் பெற முடியாமல் இடையூறு செய்யும் துஷ்டர்களையும் துர்குணங்

---




## நாணயத்துக்குக் காலமில்லை!

''சென்னையில் நடைபெற்ற டெஸ்ட் வரையில் எல்லா பந்தயங்களிலும் 'டாஸ்' போடும்போது காளி சரண் 'தலை' (Heads) என்பார். டெல்லி டெஸ்டில் நான் 'டாஸ்' போட்டபோது அவர் 'பூ' (Tails) என்று கூறியிருக்கிறார். காஸ, 'தலை' விழுந்தது. நான் எப்போதும் போல் காளிசரண் 'தலை' என்றுதானே கூறியிருக்கப் போகிறார் என்ற நினைப்பில் அவர் தான் டாஸ் ஜெயித்திருக்கிறார் என்று நினைத்து அவரைப் பாராட்டினேன். அவர் என் தவறைச் சுட்டிக் காட்டிய பிறகே நான்தான் டாஸில் ஜெயித் தேன் என்பது எனக்குப் புரிந்தது. மற்ற காப்டன் களாக இருந்தால் இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டிருப்பார்கள். ஆனால் 'பாபா' அப்படிச் செய்ய வில்லை. (நானும் காளிசரணும் ஒருவரையொருவர் 'பாபா' என்றுதான் கூப்பிட்டுக் கொள்ளுவோம்). அந்த மாதிரி நிலையைப் பயன்படுத்திக் கொண்ட வீரருடைய பெயர்களை கூட என்னிடம் காளிசரண் கூறினார்.

நான் பாட் செய்ய முடிவு செய்தேன். ரன்கள் குவிந்தன. மாலையில் ஒரு விக்கெட் நஷ்டத்துக்கு இந்தியா 264 ரன்கள் எடுத்தது. நான் 119 ரன்னில் அவுட்டாகாமல் இருந்தேன்.

அப்போது காளிசரண் காலையில் நடைபெற்ற 'டாஸ்' நிகழ்ச்சியை நினைவுபடுத்தி 'நாணயத்துக்குக் காலமில்லை' என்றார் விளையாட்டாக.''

—சுனில் கவாஸ்கர் 'ஸ்போர்ட்ஸ் வோர்ல்ட்' பத்திரி கையில் எழுதிய கட்டுரையிலிருந்து கே. ஆர்.

# கிரிக்கெட் கற்கலாம்! 29

கோச் : கே. சந்திரசேகர்

படம் : ராஜ்.. தயாரிப்பு : குண்டுமணி

## விரைவுப் பந்து வீச்சாளர்கள் பிரயோகிக்கும் முக்கிய கணைகள்




### யார்க்கர்

யார்க்கர் பந்து வீச்சு புதிய பாட்ஸ்மன்களைத் திணற அடிக்கும். யார்க்கர், பரமசிவங் கோமடுக்குள் பிசாசு கிடப்புக் குச்சிகளைத் தாக்கும்.



இளார்க் - லெனக்கர்

### பௌன்சர்

தோள் பட்டை உயரத்துக்கு இந்தப் பந்து வீச்சு எம்பி மேலெழும். பௌன்சர் பாட்ஸ் மன்களைக் கதி கலங்கச் செய்யும்.

### 'மெதுவான' பந்து வீச்சு

விரைவுப் பந்து வீச்சு நடக்கும் தருணத்தில் திடீரென்று நடுவில் ஒரு தடவை மெதுவான பந்து வீச்சைக் கையாண்டால் பாட்ஸ்மனை நிலை குலைய வைக்கும். பாட்ஸ்மன் திணறிக் 'காட்ச்' கொடுக்கவும் செய்வார்!



களையும் போக்கடிக்க வேண்டும்; அப்புறம் ஞானத்தைத் தர வேண்டும். துஷ்ட சிக்ஷைக்குப் பிறகு சிஷ்ட ரக்ஷை.

துஷ்ட சிக்ஷைக்காக ஏற்பட்டதே சாரத நவராத்திரி. மதுகைடபன், மஹிஷாஸுரன், சும்பன், நிசும்பன், சண்டன், முண்டன் முதலான துஷ்டர்களை — கெடுதல்களை — அழிப்பதற்காகவே அந்த நவராத்திரியில் அம்பாளானவள் காளி மஹிஷாஸுர மர்த்தினி, சாமுண்டேச்வரி முதலிய கோர ரூபங்களில் ஆவிர்பவித்தாள். இவர்களையெல்லாம் பொதுவாக 'துர்க்கை' என்கிறோம்.

சிஷ்ட ரக்ஷைக்கான ஞானத்தைத் தருவதற்காக அவளே வஸந்த நவராத்திரியில் ஞானாம்பாளாக ஆவிர்பவித்தாள். கேநோபநிஷத்திலேயே இந்த அவதாரம் பற்றி இருக்கிறது. தேவாஸுர யுத்தத்தில் வெற்றி பெற்ற தேவர்கள், ஈச்வரானுக்ரஹ சக்தியால்தான் ஜயித்தோம் என்பதை மறந்து சொந்த சக்தியாலேயே ஜயித்ததாக அஹம்பாவப் படுகிறார்கள். அப்போது பரமாத்மா இன்னதென்று சொல்ல முடியாத ஒரு யக்ஷ வடிவத்தில் அவர்களுக்கு நடுவே தோன்றுகிறார். அது என்ன என்றே கண்டுபிடிக்க முடியாமல் அக்னி, வாயு எல்லாரும் தோற்றுப் போகிறார்கள். அது போட்ட ஒரு சின்ன காய்ந்த புல்லைக்கூட அக்னியால் எரிக்க முடியவில்லை. வாயுவால் நகர்த்த முடியவில்லை. 'ஓஹோ, நமக்கென்று ஒரு சக்தியும் இல்லை. நமக்கெல்லாம் மேலே ஒரு சக்தியிருக்கிறது' என்று அப்போதுதான் இந்திரனுக்கு அஹம்பாவம் கரைய ஆரம்பிக்கிறது. உடனே யக்ஷம் இருந்த அதே இடத்தில் — அதாவது யக்ஷமாக வந்த பரமாத்மாவே — உமா ஹைமவதி என்கின்ற ஞானாம்பாளாக ஆவிர்பவித்து, அவனுக்கு உபதேசம் பண்ணுகிறாள். இதைக் கொண்டாடுவதுதான் வஸந்த நவராத்ரி.

இருட்டு அதிகமான தக்ஷிணாயனத்தில் தமோமயமான அஸுர நாசத்துக்காக ('தமஸ்' என்பது இருட்டு, அஞ்ஞானம் இரண்டையும் குறிக்கும்) கறுப்பாக வந்தவளே, வெளிச்சம் அதிகமுள்ள உத்தராயணத்தில் ஞானம் தருவதற்காக உமா என்ற ஹைமவதியாக வந்தபோது பச்சைப் பசேல் என்று ஜொலித்துக் கொண்டு அவதாரம் பண்ணினாள். பச்சை, பசுமை என்பது வளர்ச்சியை, வாழ்வைக் குறிப்பது. பார்வதியாகவும், மீனாக்ஷியாகவும் இருக்கும் போது மரகதப் பச்சையாக அம்பாள் இருக்கிறாள். காளியின் கோர ரூபத்தில் துஷ்ட சிக்ஷை செய்தபின், இப்போது ஸௌம்ய ரூபத்தில் ஞானத்தைத் தந்து, நல்லறிவைக் கொடுத்து சிஷ்ட ரக்ஷை தருகிறாள். 'மாதா மரகத ச்யாமா' என்று காளிதாஸரும், 'மரகதச் சாயே' என்று முத்துஸ்வாமி தீக்ஷிதரும் ஸ்துதிக்கிற திவ்ய வர்ணத்தில் ஞானாம்பாள் விளங்குகிறாள். இதே காலத்தில் அவதாரம் பண்ணின ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியும் 'தூர்வாதள ச்யாமளம்' (அருகம் புல்லைப் போலப் பச்சென்று விளங்குபவன்) என்றும் 'மரகத மணிவண்ணன்' என்றும் வருணிக்கும்படியாகப் பச்சை நிறத்தில் ரூபம் கொண்டு ஞானத்தைத் தந்து ரக்ஷித்து வருகிறான்.




தினமும் காலையில் எழுந்த உடனேயே, 'இன்றைக்கு நான் நன்றாகவே இருக்கிறேன், நன்றாகவே இருக்கிறேன்' என்று பத்து முறை மனத்துக்குள்ளாகவே சொல்லிக்கொள்.

'இன்றைக்கு எனக்கு ஏதோ ஒரு லாபம் வரப் போகிறது; என் உள்ளம் ஏதோ ஓர் உற்சாகத்தில் மிதக்கிறது' என்று பத்து முறை சொல்லிக் கொள்.

இன்றையப் பொழுது நன்றாகவே விடிந்திருக்கிறது:'' என்று சுற்றுமுற்றும் பார். 'எல்லாமே நன்றாக இருக்கின்றன' என்று உனக்குள்ளாகவே எண்ணிக் கொள்.

குளிக்கப் போகும்போது, 'இந்தக் குளியல் எவ்வளவு உற்சாகமாக இருக்கிறது' என்று உனக்குள்ளாகவே சிந்தித்துக்கொள்.

சாப்பிட உட்காரும்போது, 'அருமையான சாப்பாடு; அற்புதமான சாப்பாடு. எவ்வளவு நன்றாக இருக்கிறது' என்று மீண்டும் அதைப் பற்றியே சிந்தித்துக் கொள்.

இப்படிச் சிந்தித்துக் கொண்டே வந்தால் 'ஆரோக்யமற்ற உடம்பு கூட ஆரோக்கியமாக ஆகிவிடும்,' என்று ஒரு தத்துவஞானி எனக்குச் சொல்லித் தந்தார்.

மேலும் அவர் எனக்குச் சொன்ன ஒரே ஒரு விஷயம், 'காலையில் எழுந்ததிலே இருந்து நான் நன்றாகவே இருக்கிறேன் என்று சொல்லப் பழகிக் கொண்டால், உண்மையிலேயே நீ நன்றாகவே இருப்பாய்' என்பதாகும்.

கொஞ்ச காலமாக நான் அதைக் கடைப்பிடித்துப் பார்க்கிறேன். நன்றாக இருப்பதாகவே எனக்குள் தோன்றுகிறது. இதன் பெயர்தான் மனோதத்துவம் என்பது.

டாக்டர் ஒரு நோயாளியைப் பார்த்து, ''உங்கள் உடம்புக்கு ஒன்றுமே இல்லையே, ஏன் இப்படிக் கவலைப்படுகிறீர்கள்?'' என்று சொன்னால் அவன் நோய் தீர்ந்து விடுகிறது.

மனோதத்துவம் என்பது இதுதான்.

'உன்னை நீ அறிவாய்' என்பதிலே, 'உன்னை நீயே வசியம் செய்து கொள்' என்பதும் ஒரு பகுதியாகும்.

என்னை நானே வசியம் செய்து கொண்ட பகுதிதான் இன்று நான் வாழ்ந்து கொண்டிருக்கின்ற பகுதி. இப்பொழுது என்னாலே நிறைய எழுத முடிகிறது. நிறைய உற்சாகமாக இருக்க முடிகிறது.

ஆண்டவன் மனசுக்கும் உடலுக்கும் இடையிலே ஒரு தொடர்பை ஏற்படுத்தி வைத்திருக்கின்றான். மனம் எப்படிச் சிந்திக்கிறதோ, உடம்பு அப்படி வளைகிறது. மனம் பயப்படத் தொடங்கினால் உடம்பு வியர்க்கிறது. நெற்றி வியர்க்கிறது. உடம்பு நடுங்குகிறது; அழுகை வருகிறது. உள்ளுக்குள்ளே இருக்கின்ற ரத்தத்தில் கலந்திருக்கின்ற தண்ணீர் வெள்ளம் கண்ணீர் வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது.

உடம்பினுடைய அதிர்ச்சி, மனத்தினுடைய அதிர்ச்சியிலேதான் விளைகின்றது.

காரிலே போகும்போது கார் எவ்வளவு குலுக்கினாலும் உடல் அதிர்ச்சியடைவதில்லை.

ஆனால் மனம் ஒரு குலுக்குக் குலுக்கும் போது, பலமுறை அதிர்ச்சிக்குள்ளாகிறது.

மின்சாரத்துடைய அதிர்ச்சியை விட, அது அதிகமாக ஆகிறது.

அதனாலேயேதான்,'மனத்தையே நீ ஒழுங்கு படுத்திக் கொள்' என்று, பெரியவர்கள் நமக்குச் சொன்னார்கள்.

இந்த மனம் இருக்கிறதே அதைச் செம்மைப் படுத்தி, பக்குவப் படுத்திப் புடம் போட்டு எடுத்து அதைச் சரியாக வைத்துக் கொண்டால், உடம்பு, சூழ்நிலை, எதிர்காலம், ஆயுள் எல்லாமே ஒழுங்காகி விடுகின்றன.

இந்த மனத்தினுடைய சக்தியாலேதான் உடம்பு இயங்குகிறது என்பது மட்டுமல்ல, சூழ்நிலையும் இயங்குகின்றது என்பதை என்னாலே காண முடிகின்றது.

எது எது எப்படி எப்படி இருக்க வேண்டும், எங்கெங்கே இருக்க வேண்டும் என்று மனம் தீர்மானிக்கிறதோ அந்தந்த இடங்களிலே எல்லாம் அதுஅது வந்து அமரும்படி கை கால்கள் இயற்கையாகவே வேலை செய்யத் தொடங்கி விடுகின்றன. ஆகவேதான் மனத்தைக் கொண்டு உன்னையே நீ வசியம் செய்து கொள் என்கின்ற உண்மையை என்னாலே கண்டு பிடித்துக்கொள்ள முடிந்தது.

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

ஜெயகாந்தன்

## 10. அவளுக்கு ஒரு மாப்பிள்ளை !

**கா**ந்திமதிக்குத் தன் அண்ணனை இந்தச் சின்னத் தம்பிப் பயல் சற்றுமுன் கேட்ட கேள்விகள் எல்லாம் நியாயமானதாகவே தோன்றின. தனது அண்ணனை இதைப் போல் வேறு யாராவது பேசியிருந்தால் அவர்களை அவள் மனதார வெறுத்துச் சபித்திருப்பாள்!

ஆனால் இப்போதோ 'இந்தச் சிலுக்குப் பையன் இவ்வளவு விதரணையாக எப்படிப் பேசக் கற்றுக் கொண்டான்! இவ்வளவு தூரம் யோசனை செய்ய இவன் எப்படித் தயாராகி விட்டான்' என்றெல்லாம் அவளுக்கு மனத்துள் பெருமிதமாகத்தான் இருந்தது — இது ஒருபக்கம்.

இன்னொரு பக்கம் தன் அண்ணனத்தையை நினைக்கிறபோது, தன்னிலும் மூத்தவன் தன் எதிரிலும், மற்ற பெண்கள் மத்தியிலும் வந்து ஒரு குழந்தைபோல் நின்று, 'இந்தப் பையன் என்னை இப்படியெல்லாம் கேட்கிறானே! இவனுக்கு நான் என்ன தீங்கு செய்தேன்... என் மகனைப்போல இவன் மேலே பிரியம் வைத்து, அப்பா மீது இருந்த கசப்பையெல்லாம் நான் இவனுக்காக மறந்திருந்தேனே... இவன், என்னை இப்படி மரியாதை கெடப் பேசுவது!...' என்று அழுதபோது அவளுக்குத் தன் அண்ணன் மீது பரிவும், அவனுக்காகத் துக்கமும் நெஞ்சில் பொங்கிற்று!

''சரி, சரி — அந்தச் சின்னக் கழுதை என்னமோ பெரிய பேச்சுக் கத்துக்கிட்டு வந்து பேசிப் பார்த்திருக்குது — இதுக்காக நீ வருத்தப் படாதே அண்ணாத்தே. மகன் மாதிரி மகன் மாதிரின்னு என்ன? இதுக எல்லாமே நமக்கு மகனுங்க தான்; மகனுங்க தான்; பெத்தாத்தானா? பெத்தவங்கதான் இப்படி போயிடறாங்களே! அப்பறம் கூடப் பொறந்தவங்கதான் பெத்தவங்களா இருக்கணும்... இதோ! இந்த வைத்தியை எனக்குத் தம்பின்னு நான் நினைக்கறேன்? நம்ப அம்மா இவனைப் பத்துமாசம் தான் சொமந்தாங்க இவனை... நான் பத்து வருஷமா சொமந்து இப்பத்தானே இடுப்பிலிருந்து இறக்கி விட்டேன்... அப்பிடித்தான் அண்ணாத்தே! நம்மப் பெத்தவங்களும் போயிட்டாங்களே, நாம்பதான் இதுங்களுக்கு அப்பாவா, அம்மாவா இருந்து புத்தி புகட்டி விடணும்... அப்புறம் எப்பிடியும் போகட்டும் — பழனியாண்டவர் பாத்துக் கட்டும்...'' என்று அந்த வழியாக ஒரு பொரிவிளங்காயைக் கடித்துக் கொண்டு கையில் ஒரு பம்பரத்தைச் சுற்றி விடுவதற்குத் தயாராய்ப் பூமியில் குறி பார்த்து நிற்கும் வைத்தியையப்பாசத்துடன் பார்த்தவாறே சொன்னாள் காந்திமதி.

''அடே அறிவு கெட்டவனே!... பம்பரம் விடறதுக்கு இதுவா இடம்?... கட்டாந்தரையிலே போயி விடு... இங்கே தரை பேர்ந்துடும் சனியனே'' என்று அவனை அதே பாசத்துடன் செல்லமாகத் திட்டி விரட்டினாள்.

அவன் ஓடும்போது, ''அம்மாடி! இந்தப் புள்ளையும் தேறி எல்லாப் பசங்களைப் போலவும் ஓடி ஆடி வெளையாட நம்ப கண் பார்க்குமான்னு நான் ராத்திரிப் பகலா அவரை வேண்டினது பழனியாண்டவருக்குத் தெரியும்!'' என்று ஒரு தாயைப் போலவே, தன் தம்பியைப் பார்த்துப் பூரித்துப் போகிற தங்கையிடமிருந்து தான் ஏதோ ஒரு நல்ல பாடத்தைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று பெரியசாமி நினைத்தான். பதினெட்டு வயதுக்குள் விதவையாகித் தாய் வீட்டோடு வந்து, இந்தத் தம்பியை ஒரு மகனைப் போல் வளர்த்து, இந்தத் தாயற்ற குழந்தைக்குத் தாயே ஆகிவிட்ட இவளது தன்மை எவ்வளவு போற்றற்குரியது என்று உள்ளூற வியந்து கொண்டான் பெரியசாமி. காந்திமதியின் சோகமான கதையை நினைக்கையில் சற்றுமுன் ஏற்பட்ட அவனது வருத்தம் கனம் குறைந்து போயிற்று.

காந்திமதியும் பெரியசாமியும் பேசிக் கொண்டே வீட்டின் முன்பக்கமுள்ள



பெரிய திண்ணைகளை விட்டுவிட்டு, குறட்டோரம் இருந்த சிறிய ஒட்டுத் திண்ணைகளில் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

விளக்குச்சாமி தனது கடமைகளை முடித்துவிட்டு ஏணியைக் கொண்டு வந்து திண்ணைக்குப் பக்கத்தில் சாய்த்தார், படிக்கட்டுகளில் ஏறி மேல் படிகளில் சற்றுமுன் இருந்தது போலவே உட்கார்ந்து கொண்டார்.

''பாவம், சிங்காரம் குழந்தைதானே.!... அவன் கிட்ட இந்தச் சொத்து உயில்ங்கறதைப் பத்தியெல்லாம் சின்னம்மாதான் பேசுதுன்னு நெனைக்கறேன்'' என்று பெருமூச்சு விட்டான் பெரியசாமி.

''சும்மாயிரு... அந்த அழுக்குச்சாமி வரான்...'' என்று அண்ணனின் அபிப்பிராயத்தை மறுப்பது போலவும் அடக்குவது போலவும் கூறி விட்டுக் குரலைத் தாழ்த்தி பேசலானாள் காந்திமதி. ''அப்பிடி - என்னமோ யோகத்திலே இருக்கறது மாதிரி கண்ணை மூடிக்கிட்டு யாரு என்ன பேசறாங்கன்னு கேட்டுக் கேட்டு முடிஞ்சுக்குவாரு. எனக்கு என்னமோ இந்தச் சாமியாருதான் எப்பவும் சிறுக்குப் பையனைக் கையிலே புடிச்சிக்கினு தோப்புத் தொரவுலே எல்லாம் சுத்தறாரு... இவருதான் ஏதாவது அவன் கையிலே வத்தி வச்சிருப்பாரு'' என்று அந்த வத்தி வைக்கிற கைங்கர்யத்தைத்தானே நிறைவேற்றினாள் காந்திமதி. ஆனால் அது பற்றவில்லை.

''சீசீ! இருக்காது – யாரைப் பத்தி என்ன நினைக்கிறதுன்னு ஒண்ணும் வரைமுறை கிடையாதா?'' என்று ஏதோ அபசார வார்த்தையைத் தடுப்பது போல் பதறினான் பெரியசாமி.

அவனுக்கு விளக்குச்சாமியோடு அதிக நெருக்கமில்லாது போயினும் எப்போதேனும் அவரது கனிவான புன்னகையைக் கண்டு கைகூப்பிப் பக்தி செலுத்துவான். அவர் சாமியாராக இருப்பது ஒன்றே அவனது பக்திக்குப் போதுமானது. அதற்குமேலும் அவர், சமைத்த உணவு உட்கொள்ளும் பழக்கத்தைக் கைவிட்டவர் என்று தெரிய வந்தபோது அவர்பால் அவனுக்குள்ள பக்தி மிகுந்தது.

மருடேசன் பிள்ளை இருந்த காலத்தில் எப்போதாவது இவனைத் தேடிக் கொண்டு சாமியார் வருவார். அவர் வருவதைத் தவிர வேறொன்றும் விசேஷமிராது. அப்போதெல்லாம் அவர் பச்சரிசியும் வெங்காயமும் தின்று உணவுக் கடனை முடிப்பதை ஓர் அதிசயமாகக் கவனித்து மெய் சிலிர்த்து இவரை ஒரு சித்த புருஷர் என்றே பெரியசாமி மதித்திருந்தான். அதற்கேற்ப அவர் பேசுகிற சாதாரண மொழிகளிலும் அவன் விசேஷமான அர்த்தங்களும் அறிவுரைகளும் கண்டான். அவரும் அப்படித்தான் சுபாவமாகவே பொருள்



செறிந்த, ஆழ்ந்த யோசனையுடைய பேச்சுக் கலையே எப்போதாவது பேசுகிறார்.

சாமியாரின் பேச்செல்லாம் மகுடேசன் பிள்ளையோடு போச்சு! அதன் பிறகு அவர் துணையற்ற தனிமை போல் ஆகியிருப்பதாக நினைத்துக்கொண்டிருந்த பெரியசாமிக்கு 'சிங்காரத்தை அவர் தான் தூண்டி விட்டு இப்படியெல்லாம் பேச வைத்திருப்பார்' என்று காந்திமதி சொல்லுவதை நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை.

''சரி... இப்ப யார் அவனைத் தூண்டி விட்டிருப்பாங்கன்னு ஆராய்ச்சி பண்ணி என்ன பிரயோசனம்? அவன் சின்னவனோ பெரியவனோ, அவன் பேசறதிலே இருக்கிற நியாயத்தைப் புரிஞ்சுக்கிட்டு நாம்ப புத்தியோட விலகிக்கிட்டாத்தான் நம்ப மரியாதையைக் காப்பாத்திக்கலாம்'' என்று மனம் உடைந்தவனாகச் சொல்லிக் கொண்டான் பெரியசாமி. வருத்தத்தால் குனிந்த தலையும் யோசனையுமாய் உட்கார்ந்திருக்கும் அண்ணனைச் சிறிதே இடுங்கிய கண்களுடன் உற்றுக் கவனித்தாள் காந்திமதி.

''அண்ணாத்தே! உனக்குத் தெரியாத நியாயம் ஒண்ணும் நான் சொல்ல வரலே... இப்ப அந்தப் பையன் பேசினதுக்காக நீ இப்படிக் கோவிச்சுக்கிட்டுப் போறது உன் மரியாதைக்கு அழகுதானான்னு நீ யோசி. அப்பா அதையெல்லாம் யோசிச்சுத்தான் உன் கையிலே எல்லா அதிகாரத்தையும் இந்தப் பையனுங்க தலையெடுக்கற வரைக்கும் ஒப்படைச்சி எழுதி வைச்சிருக்கார்... இப்ப உன்னை ஆத்திரமூட்டி இங்கேயிருந்து விரட்டிப்பிட்டா அவங்க இஷ்டத்துக்கு ஆடலாமில்லே? 'தாலியறுத்த வீட்டிலே தலைக்குத்தலை நாட்டாமை பண்ணலாம் இல்லே? அந்தப் புத்தியிலேதான் இந்தச் சின்னப் பையனைத் தூண்டி விட்டிருப்பா அந்தக் கப்பல்காரி — இப்ப எனக்குப் புரியுது. எல்லாம் அந்தக் கப்பல்காரி தூண்டுதலாக்கூட இருக்கும். அதுக்குச் சௌகரியமா நீயும் கோவிச்சுக்கிட்டு எல்லாத்தியும் உட்டுப் போயிட்டா — அது சரிதானா? அதான் நியாயமா! இதுதான் அப்பாவுக்கு நாம்ப செய்யற கடமையா?ன்னு யோசி... ஆச்சு... சிங்காரத்துக்குப் பதினாறு வயசு... இன்னும் நாலு வருஷம் — நீதான் அவனை நல்ல குணம் சொல்லி கண்டிச்சித் திருத்தணும். அத்தெ வுட்டுட்டு அந்தப் பையன் இட்டினதுக்காகக் கோவிச்சுக்கிட்டுப் போறேன்னு அது சரின்னு எனக்குப் படலே... என்னய்யா சாமியாரே நடந்ததையெல்லாம் பாத்துக்கிட்டுத்தானே இருந்தீங்க?'' என்று சாமியாரையும் சம்பாஷணையில் இழுத்தாள் காந்திமதி.

''கொஞ்ச நேரம் தலையை ஆட்டாமல் அப்படியே இரு சாமி! கத்தியைத் தீட்டிக்கிறேன்.''



''ஆமாம்... அதைத்தான் நானும் சொன்னேன். யார் என்ன சொன்னாலும், ஈசுவரனுக்குப் பொதுவா, நம்ப மனசைச் சுத்தமா வச்சுக்கிட்டு நாம செய்ய வேண்டிய கடமையைச் செய்துடவேணும்... நாளைக்கி நீங்க—உங்களைத்தான் பெரியசாமிப் பிள்ளே!... நீங்க அந்தப் பள்ளிக் கூடத்துக்குப் போயி அந்தப் பாதிரியாரு கிட்ட நம்ப தம்பியைப் பத்தி, அவரு படிக்கறதைப் பத்தி, ஒழுங்கா வகுப்புக்கு வரானானு எல்லாம் விசாரிங்க... சின்னப் பையன் தப்புசெய்தால் உரியவங்களை விட்டுக் கண்டிக்கவோ புத்திமதி சொல்லவோ செய்யறதுதான் நல்லது. நீங்களே இனிமே அவனோட அடிக்கடி மோதிக்கிறது அது நல்லதில்லே; அது மரியாதை தெரிஞ்ச பிள்ளையா இல்லே... உங்க மனசுக்கு அதெல்லாம் தாங்காது'' என்று வெகுநேரம் சாமியார் வெங்காயத்தையும் அரிசியையும் தின்றுகொண்டே பெரியசாமிக்கு நல்ல யோசனைகள் சொன்னார்.

இதற்கிடையில் பொன்னம்மாளின் பெண் அமுதவல்லி எதற்கோ வெளியே வந்தவள் — பெரியசாமி உட்கார்ந்திருப்பதைப் பார்த்துவிட்டு 'மாமா இருக்காங்க' என்று வெட்கப்பட்டுக் கொண்டு உள்ளே ஓடினாள். அந்தப் பத்துவயதுச் சிறுமியின் அழகையும், தாய் மாமனை தன்னைப் பார்த்து வெட்கப்பட்டுக் கொண்டு அவள் ஒரு பறவை மாதிரி ஓடி மறைந்ததையும் கண்டு பெரியசாமி காந்திமதியிடம் பரிகாசமாகக் கேட்டான்.

''அமுதுவுக்குப் பத்து வயசாகுதில்லே, இன்னேரம் அவளுக்கு ஒரு மாப்பிள்ளைப் பாத்து மனசிலே முடிச்சுப்போட்டு வைச்சிருப்பாயே?'' என்று அவன் கேட்டு விட்டுச் சிறிதே சிரித்தான். அவன் சிரிப்பு அடங்குகிற வரை மௌனமாய் இருந்தாள் காந்திமதி. — இதைச் சொல்லலாமா, கூடாதா என்று தயங்கினாள்—சாமியார் இருப்பதைப் பார்த்து அவர் காதில் விழுந்து விடாமல் அண்ணனின் காதருகே குனிந்து, தன் மனத்தில் முடிச்சிட்டு வைத்திருக்கும் தீர்மானத்தைச் சொன்னாள்.

''நம்ப சிலுக்குத்தான்... அவனுக்குன்னே தான் பொறந்தவள் அமுது... நீ வேணும்னா பாரு!'' என்று சொல்லி வைத்தாள் காந்திமதி.

ஏதோ கெட்டி மேளம் முழங்குகிற சத்தத்தைக் கேட்டது போல் விழிகள் விரிய அந்தக் காட்சியைக் கற்பனை செய்து, 'அது நல்லதே — நிறைவேறட்டும்' என்று கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டான் பெரிய சாமி.

(தொடரும்)









● தலையங்கத்தில் 'மலரிலிருந்து தேனைத் தேனீ எடுப்பதுபோல் மக்களுக்குச் சிரமமில்லாத வகையில் வரி விதிக்க வேண்டும்' என்று ராஜாஜி கூறியதை மேற்கோள் காட்டியிருப்பது அருமை. இப்பொழுதைய பட்ஜெட் கோழியின் இறகுகளை ஒவ்வொன் றாகப் பிய்ப்பது போல் இருக்கிறது. சரண் சிங் பழி வாங்கி விட்டார் என்பதில் சந்தேகமே இல்லை. மக்களை மட்டுமா என்பதில்தான் சந்தேகம்!

சங்கரன்கோவில் புரோபலர்

● பட்ஜெட் பற்றிய தலையங்கம் லட்சக் கணக்கான ஏன் கோடிக்கணக்கான மக்களின் எண்ணப் பிரதிபலிப்பாக இருந்தது. பட்ஜெட்டில் இருவர் சந்தித்தால் வரி என்று ஒன்றும் இல்லையே? பின் ஏன் இருவர் சந்திப்பு இந்த இதழில் இடம் பெறவில்லை? சந்திப்புப் பகுதியைத் தொடர்ந்து வெளியிடுங்கள்!

திருநெல்வேலி ப. தமிழ்மணி

● 'கார்ட்டூனில் ராஜ் நாராயணன் எல்லா மாதத்தையும் 'வரி' மாதமாக மாற்றச் சொல்லிச் சரண்சிங்கிற்குச் சொல்வதாக மிகப் பொருத்தமாக அமைந்திருந்தது. ஒரு சிறிய சந்தேகம். பிப்ரவரியில் வரிபோட்ட பிறகு மார்ச் மாதம் முதல் எல்லா மக்களும் 'மார்ச்சுவரி'க்கல்லவா போவார்கள்! பின்னே எங்கிருந்து ஏப்ரல் முதல் வரி செலுத்துவது?

சென்னை—92 சி. ராஜகோபாலன்

● 'ஒரு கெமிஸ்ட்ரி அசடு காதலிக்கிறது' கதையைப் படிக்கும் போது நைட்ரஸ் ஆக்ஸைடை முகர்ந்தது போலிருந்தது. (கெமிஸ்ட்ரி படிக்காத அசடுகளுக்காக: நைட்ரஸ் ஆக்ஸைடு என்பது Laughing gas அதை முகர்ந்தால் சிரிப்பு வரும்).

திருநெல்வேலி கிருஷ்ணன்

● ''திரு. செம்பியனே யாரென்று தெரியாமல், நாங்கள் தலையைப் பிய்த்துக் கொண்டிருக்கும் போது ''செம்பியன் தம்பி'' வேறு!

திருவண்ணாமலை ஆர். கோபாலகிருஷ்ணன்.

● மேலட்டைப் படத்துக்கு விளக்கத்தைப் பார்த்தேன். அட்டைப்பட விளக்கமாக இருந்தது என்பதைவிட ''கல்கி ஃபாஷன் சிறப்பிதழுக்கு'' நல்ல விளம்பரமாக அமைந்து விட்டது. என்று கூறலாம். கெட்டிக்காரர் தான் நீங்கள்!

திருப்பாப்புலியூர் கு. குருமுருகு

● உமாபதி அவர்களின், 'படாபட்ஜெட்' கார்ட்டூன்கள் படா பிரமாதம் சார்! 'வரி' ஜோக்குகளை ஒரு 'வரி' விடாமல் படித்து ரசித்தேன்!

திருப்பூர்—1 ப. திருமுருகன்

● 25.2.79 கல்கியில் வெளியாகியிருக்கும் ''காரல்மார்க்ஸ்'' பற்றிய இன்டலான துணுக்கைப் படித்தேன். 'கார்ல் மார்க்ஸ்' எவ்வளவு பெரிய மேதை, உலகத்துக்கே, வழி காட்டிய தந்தை. தரக் குறைவான துணுக்குகளை எந்தப் பத்திரிகை ஆதாரம் கொண்டும் எழுத வேண்டாம். 'போட்டார் ஒரு போடு' என்பதைப் பார்த்ததும் மிகவும் வேதனைப்பட்டேன். போட்ட போடு சரி என்பது போலல்லவா இருக்கிறது!

சென்னை—34 மல்லிக்

● 'A' படங்களை விமர்சிக்கிறேன் பேர் வழி. என்று பலர் அந்தப் படங்களைத் தாக்கிய வாறே அசிங்கமான ஸ்டில்களை வெளியிடும் பொழுது, ''பாப்பாத்தி'' என்ற 'A' திரைப் படத்தினை திரு பி. எஸ். எம். விமர்சித்தாலும், 'செக்ஸி'யான காட்சிகளை வெளியிடாமல் கண்ணியமான படத்துடன் விமர்சனம் வெளியிட்டு ''கல்கி'' மிகவும் உயர்ந்தது என்று நிரூபித்து விட்டீர்கள்.

திருச்சி வெ. முத்துக்கணேசன்

● ''பத்து ஒளி வருடங்கள்'' கதை படித்தேன். பல வருடங்கள் நினைவில் நிற்கும் படி அமைந்திருக்கிறது.

உப்பிலியப்பன் கோவில் பாஸ்கரன்

● பயணக்கதை என்ற பெயரில் தற்பெருமைகளைக் கூறிக் கொள்பவர்கள் மத்தியில் சிவசங்கரியின் புதுமையான எழுத்து மனசைக் கவருகிறது.

நம்மையும் கூடவே தம்மோடு மலேஷியாவுக்கு அழைத்துப் போன அனுபவத்தை ஏற்படுத்துகிறார். இதைத் தொடர்ந்து அவரது நாவல்களும் கல்கியில் வெளிவருமா? என் அபிமான எழுத்தாளரின் தொடர்கதைகளை என் அபிமானப் பத்திரிகையில் படிக்கும் வாய்ப்பு ஏற்படுமா?

சென்னை—4 லலிதா பாலசுப்பிரமணியன்.

## கி.ராஜேந்திரன்

### அத்தியாயம் 25

தனக்குள்ள பிரச்னைகள் பற்றி பிரமீளாவிடம் சத்யா மனம் விட்டு விவாதித்திருக்கலாம். சொந்தப் பிரச்னைகள், தொழிலகம் சம்பந்தப்பட்ட பிரச்னைகளைக் குறித்துப் பேசியிருக்கலாம். பிங்கியினால் அதிகமாக உதவ முடியாமல் போனாலும் மனம் விட்டுப் பேசுவதிலேயே ஓரளவு தெளிவு பிறந்திருக்கும். மனச் சாந்தி கிட்டியிருக்கும். ஆனால்



இவ்வாறு செய்ய முடியாமல் சத்யாவை ஒரு தாழ்வு மனப்பான்மை தடுத்து விட்டது.

பிங்கி சத்யாவைத் தேடிப் போய்ப் பேசி அவனுடைய பிரச்னைகளைக் குறித்துத் தானே வலியக்கேட்டு விவாதித்துத் தைரியம் சொல்லி இருக்கலாம். அது யானை பலத்தை அவன் உள்ளத்துக்குத் தந்திருக்கும். ஆனால், 'அவர் வந்து கேட்காமல் நாமாகவே போய் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது? ஏன் அவ்வாறு செய்ய வேண்டும்?' என்பது போன்ற தயக்கமும் கௌரவப் பிரச்னையும் குறுக்கிட்டு விட்டன.

நிகர விளைவு, சத்யா, மேன்மேலும் ஆனந்த் — நித்யா ஆகியோரிடம், இது தனக்கு நல்லதில்லை என்று உள்ளுணர்வு உணர்த்தியும் சிக்கலானான்.

ஆனந்த் பிரமீளாவை ஏதாவது காரணங்களைக் கற்பித்துக் கொண்டு சந்திக்க ஆரம்பித்தான். இதைத் தவிர்ப்பது நல்லது என்று உள்மனம் எச்சரித்தும் பிரமீளா அவனைத் தடை செய்யவில்லை.

அன்று சத்யா மனத்தாங்கலும் கோபமுமாக வெளியேறிய போது, கடைசியாக பிங்கி சொன்னாள்: ''நமக்குள் நிலவரம் எப்படியானாலும் சுலோசனா — தீபக்கால் திருமணத்தைத் தள்ளிப் போடாதீர்கள்; சீக்கிரம் நடக்க ஏற்பாடு பண்ணுங்கள்!''

''பொரிசு பிடிக்க அவர்களுக்கு உன்னைத் தவிர வேறு ஆள் அகப்படவில்லையாக்கும்!'' என்றான் சத்யா. ''தீபக்கை மறுபடியும் சந்தித்தால் தப்பித்தவறிக் கூட என் எதிரே வந்துவிட வேண்டாம் என்று எச்சரித்துவை! என் கரங்கள் அவன் மென்னியை முறிக்கத் தினவெடுத்துக் கொண்டிருக்கின்றன!''

விடுவிடுவென்று சென்று காரில் ஏறிப் புறப்பட்டு வந்து விட்டான் சத்யா. இரு தினங்களுக்கு அந்த நிகழ்ச்சி மனத்தை விட்டு அகலாமல் இருக்கக் குமைந்து கொண்டிருந்தான். பின்னர் ஏதோ கனவு போல் பிங்கியுடன் நடந்த வாக்குவாதம் பற்றிய நினைவுகள் தேய்ந்து மறையத் தொடங்கின.

தொழிலகத்தில் மறுபடியும் புதிய பிரச்னைகள் தோன்றின. பிரச்னைகளைச் சந்திப்பதற்குப் பதில் அவற்றிலிருந்து தப்பி ஓட முயன்றான். அதற்கு மிகவும் உதவியாக இருந்தாள் நித்யா.

''உங்களுக்கு கால்ஃப் ஆடத் தெரியுமா? இன்டோர் கால்ஃப்?'' என்று ஒருநாள் கேட்டாள். இருவருமாக அன்றே சாலைக்குச் சென்று கால்ஃப் விளையாட்டுக்குத் தேவையானவற்றை வாங்கி வந்தார்கள். மானேஜிங் டைரக்டரின் காரியாலய அறை மினி கால்ஃப் கோர்ஸாக மாறியது.

நித்யா ஆடுவதைப் பார்த்து அவன் சிரித்தான். ''ஆடத் தெரியுமா? என்று என்னைக் கேட்டுவிட்டு நீ தவிக்கிறாயே?''

''உங்களுக்கு ஆடத் தெரியுமா என்று கேட்டேனேயொழிய எனக்கு ஆடத் தெரியும் என்று நான் சொல்லவில்லையே?'' என்றாள் நித்யா. ''உங்களிடம் கற்றுக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையில் ஆசைப்பட்டுக் கேட்டேன்!''

சத்யா அவளைப் பின்புறமாக வந்து அணைத்தபடி, அவள் கரங்களுடன் சேர்த்து கால்ஃப் கிளப்பைப் பற்றி ஸ்விங்கிங் ஆக்ஷன் சொல்லித் தந்தான். ''இப்படி... இப்படிப் பிடிக்கக்கணும், கிளப்பை. அப்புறம் இப்படி... இப்படி... ஸ்விங் பண்ணணும்... பிறகு பந்தை இப்படித் தட்டணும்!''

கதவைத் திறந்து கொண்டு முன்னறிவிப்பு ஏதுமின்றி ஆனந்த் நுழைந்தான். அவர்கள் நின்ற நிலையைப் பார்த்து விட்டு, ''வெல்டன்! சத்யா!'' என்று பாராட்டினான். ''நித்யா வந்ததிலேயிருந்து ரொம்ப பிஸியாயிட்டே போலிருக்கே! ஆட்டம் தொடரட்டும். நான் உங்களைத் தொந்தரவு பண்ணலை. என்னை நானே கவனிச்சுக்கறேன்.''

இப்படிக் கூறியவன், புதிதாக நிர்மாணிக்கப் பட்டிருந்த மினி காக்டெய்ல் பாருக்குச் சென்று விஸ்கியுடன் போனால் போகட்டும் என்பது போல் சிறிது சோடா கலந்து கொண்டான். ஃப்ரிஜ்ஜைத் திறந்து ஐஸ் கட்டி ஒன்றை எடுத்து மிதக்க விட்டான்.

''எனக்கு உன் போக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு சத்யா. இப்படித்தான் அஃபிஷியல் லைஃபைச் சுவாரஸ்யமா ஆக்கிக்கணும்.''

''அஃபிஷியல் லைஃபா? அது எங்கே இருக்கு? அதுதான் லாக் அவுட் டிக்ளேர் பண்ணிப் போலீஸ் காவலும் வைச்சாச்சே!''

''கவலைப்படாதே சத்யா கொஞ்ச நாளிலே வழுக்கி விழுந்துடுவாங்க'' என்றான் ஆனந்த்.

நித்யா ஸ்விங்கிங் பிராக்டிஸை நிறுத்தாமலேயே, ''என்ன ஸார் உளறுகிறீங்க? வழுக்கி விழறதாவது?'' என்று கேட்டாள்.

''ஐ ஆம் ஸாரி! நான் உன்னைப் பார்த்துண்டே பேசினேனில்லையா? உளறிட்டேன். வழிக்கு வந்துடுவாங்கன்னு சொல்ல வந்தேன்!''

நித்யா அவனுக்கு அழகு காட்டினாள். ''பாருங்க ஸார்! என்னை ஆனந்த் இன்ஸல்ட் பண்றார்'' என்று சத்யாவிடம் புகார் செய்தாள். பரிதாபத்துக்குரிய அவனால் வேறு என்ன செய்ய முடியும்?

அந்தப் புகாரை லட்சியமே பண்ணாமல், ''அதுசரி, அவங்க வழிக்கு வரத்துக்கு முன்னாலே ஏற்படுகிற நஷ்டங்களை எப்படி, யார் சமாளிக்கிறது?'' என்று கேட்டான் சத்யா.

''புரொடக்ஷன் லாஸ், மேன் அவர் லாஸ், டர்ன் ஓவர் லாஸ், நேஷனல் லாஸ்...''

''என்னடா பெரிசா ஏதேதோ அடுக்கறே? கொஞ்ச நாளைக்குப் பவர்கட் இருந்ததா நினைச்சுக் கோயேன்!''

''ஆமா, இவங்க வேலை நிறுத்தம் முடிஞ்சு நான் லாக் அவுட்டை நீக்கி உற்பத்தி மறுபடியும் தொடங்கறதுக்குள்ளே நிச்சயம் பவர்கட் வந்துடும். மறுபடியும் புரொடக்ஷன்



லாஸ், மேன் அவர் லாஸ், டர்ன் ஓவர் லாஸ்தான்!''

''நஷ்டத்தையெல்லாம் துடைச்சு எறிஞ்சுட்டு அதற்கும்மேல் அபரிமிதமான லாபம் அடைய நான் வழி சொல்லித் தரேன் சத்யா!''

''நிஜமாகவா? என்னடா அது?''

''தொழிலாளிங்க கொஞ்சம் கீழிறங்கி வழிக்கு வந்ததும் லாக் அவுட்டை லிஃப்ட் பண்ணு. அப்புறம் சில புது மருந்துகளை மார்க்கெட்டில் அறிமுகப்படுத்து. அதாவது டானிக்! பசி எடுப்பதற்கான டானிக் மருந்து. இப்பத்தான் மதுவிலக்கைத் தீவிரமாக்கி இருக்காங்களே! அதனால் இந்த டானிக்குகளுக்கு முன்னைவிட ரொம்ப கிராக்கி உண்டாகும். ஒருவேளைக்கு ரெண்டு மூணு பாட்டிலையாவது காலி பண்ணினால்தான் 'கிக்' கிடைக்கும். அதனால் நல்ல வியாபாரம் ஆகும்' என்ன விலை வைச்சாலும் வாங்குவாங்க. நிறைய லாபம் கிடைக்கும். ஆல்கஹால் தாராளமாக இருக்கும் இந்த மருந்திலே. பேருக்குக் கொஞ்சம் என்ஸைம்ஸ், சில வைட்டமின்கள் கலந்துடு. டானிக் என்கிற பேரிலே விற்கலாம். பாட்டில் கூட ஒயின் பாட்டில் வடிவத்திலேயே இருக்கலாம்!''

''பிரமாதமான ஐடியா! நீங்க ஒரு ஜீனியஸ்தான் ஆனந்த்!'' என்றாள் நித்யா.

''இது ஒண்ணும் ஒண்டர்ஃபுல் ஐடியா இல்லே. ஏற்கெனவே பலபேர் கையாண்டு கொழுத்த லாபம் சம்பாதித்து வருகிற யோசனைதான். மருந்தைப் போதைப் பொருளா மக்கள் பயன்படுத்தினா அதற்குத் தயாரிப்பாளர் என்ன பண்ண முடியும்?'' என்று சத்யா கேட்டான். ''இப்பத்தான் ஷேவிங் லோஷன், யுடிகொலானைக் கூடக் குடிச்சடறாங்களே! விஷம் என்று தெரிந்திருந்தும் வார்னிஷைக் கூட முழுங்கறாங்களே!''

''யார் யாரோ அப்படிப்பட்ட மருந்துகளைத் தயாரித்து லாபம் சம்பாதிப்பதைப் பார்த்தே நீங்க திருப்தி அடைஞ்சுடுவீங்க போலிருக்கே! நீங்க அந்த லைன்லே இறங்கணும்கிறதுதான் ஆனந்தின் யோசனை'' என்றாள் நித்யா.

''என் தகப்பனாருக்குச் சில கொள்கைகள் இருந்தன. அதனால் அவர் இந்தமாதிரி தயாரிப்புக்களைத் தவிர்த்தார்.''

''இதோ பாரு சத்யா'' என்று ஆனந்த் உபதேசித்தான்: ''அவர் காலம் முடிஞ்சு போச்சு. இப்போ நிர்வாகம் உன் கையில் இருக்கு. இன்னும் அவரோட கொள்கைகளையே ஏன் கட்டிக்கிட்டு அழறே? கொள்கைப் பிடிப்பும் பணபலமும் ஒன்றோடொன்று எப்போதுமே சேராது. ஒன்று இருக்கும் இடத்தில் இன்னொன்றைப் பார்க்க முடியாது!''

''பார்க்கின்ஸன் லாவா?'' என்று சத்யா நிர்வாகத் துறையை நையாண்டி செய்த ஒரு நிபுணரை நினைவூட்டிக் கேட்டான்.

''புடலங்காய் லா! இந்த அடிப்படை விஷயத்தைச் சொல்ல பார்க்கின்ஸனா வரணும்?''

''அப்படி கேளு நித்யா!'' என்றான் ஆனந்த். ''துணிஞ்சு இறங்குடா சத்யா!''

இத்தருணத்தில் வெளியே தொழிலாளர்கள் கோஷம் எழுப்புவது கேட்டது: ''திமிர் முதலாளி! திமிர் பிடித்த கயவாளி! விடலை ஆட்சி வேண்டாமே! முதலைக் கண்ணீர் சிந்தாதே! கதவடைப்பை ரத்து செய்! மனக்கதவைத் திறந்து வை! பொய்க்கணக்கு எழுதாதே! ஏழை வயிற்றில் அடிக்காதே! முதலாளித்துவ அடக்குமுறை ஒழிக! தொழிலாளர் இயக்க முறை வெல்க!''

சத்யா ஆத்திரத்துடன் பற்களை நறநற வென்று கடித்தான்: ''பாருடா! என்னவெல்லாம் கோஷங்கள் எழுப்பறாங்க, பாரு! ஏர் கண்டிஷன் அறையிலும் அவர்கள் கூச்சல் கேட்கிறதே!''

## பசு வதைத் தடுப்பு மதச்சார்புள்ள கோரிக்கையா?

அண்மையில் ஆசார்ய வினோபா பாவேயைச் சந்தித்த பத்திரிகை நிருபர்கள், ''மதச் சார்பற்ற நம் நாட்டில், இந்துக்களின் நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்ட பசு வதைத் தடுப்பை முழு அளவில் சட்டமாக்கக் கோருவது நியாயமாகுமா?'' என்று கேட்டனர். பாவே அளித்த பதில்:

''பசு பாதுகாப்பு அல்லது பசுவதைத் தடுப்பு மதச் சார்புள்ள கோரிக்கையே அல்ல. நாற்பது கோடி ஏக்கர் விளை நிலங்களைப் பெற்றுள்ள நாடு இந்தியா. விவசாய வேலைகளை இயந்திர மயமாக்க வேண்டுமெனில் 50 லட்சம் டிராக்டர்கள் நமக்குத் தேவைப்படும். ஆனால் இன்றைய நிலையில் நம்மிடம் 31,000 டிராக்டர்களே உள்ளன. 4



கோடி டன் உரம் நமது விவசாயத்துக்குத் தேவைப் படுகிறது. இன்று நம்மிடமுள்ள ஏறத்தாழ 4 கோடியே 67 லட்சம் நாட்டுக் கலப்பைகளுக்கு 7 கோடியே 30 லட்சம் எருதுகளே நம் வசமுள்ளன. ஆக இன்றுள்ள நிலையிலேயே ஏராளமான கால்நடைச் செல்வம் விவசாயத்துக்கு மேலும் தேவைப் படுகிறது. அது மட்டுமின்றி, கிராமப் புறங்களின் பால், எரிபொருள் தேவைகள் பெரும்பான்மையும் பசு இனத்திலிருந்தே கிடைக்கின்றன. பசுக்களைக் கொன்று, உணவாக்கிக் கொள்வதன் மூலம் கிராமியப் பொருளாதாரம் நிலைகுலையும். பசுவை வதைப்பது கோடானு கோடி ஏழை மக்களின் வாழ்வைச் சிதைப்பது ஆகும்.

குன்றக்குடி பெரியபெருமாள்.



''கவலைப் படாதேடா சத்யா!'' என்றான் ஆனந்த். ''எல்லாம் சரியாயிடும். இரண்டு நாள் வீட்டிலே அடுப்பெரிய லேன்னு கூழைக் கும்பிடு போட்டுக்கிட்டு வருவாங்க. சீர் அப்!... என்ன நித்யா! இவன் இந்த மாதிரி சோகமே உருவா நிற்கிறான்; நீ சும்மா பார்த்துக்கிட்டு இருக்கே? குஷிப்படுத்த வேண்டாம்?''

''எஸ் டார்லிங்!'' என்று ஆனந்தைப் பார்த்துச் சொன்ன நித்யா, காஃபி களைப்புடன் வந்து சத்யா முன்பாகத் தன் முதுகு அவன் நெஞ்சில் இடிக்குமாறு நின்று 'ஸ்விங்கிங்' ஆக்ஷன் செய்தாள். ''கமான் மை பெட்! டீச் மி டு ஸ்விங் இட்!'' என்றான்.

## அத்தியாயம் 26

**வை**த்தியலிங்கம் வீட்டில் விவிதபாரதி ஒலித்துக் கொண்டிருந்தது. சினிமாப் பாட்டு முடிந்ததும் விளம்பர அறிவிப்பு ஒன்று தொடர்ந்தது: ''தலைவலி உடல்வலிகளால் அவதிப் படுகிறீர்களா? உடன் நிவாரணம் பெற விழுங்குங்கள் அகலினி மாத்திரைகளே! இரண்டு மாத்திரைகளின் விலை இருபதே பைசா தான்... டிங்!''

இதைக் கேட்டுக் கொண்டே வாசலைத் தாண்டி நண்பன் ஆனந்துடன் வந்த சத்யா, ''கலோ! மூடுடி அந்த ரேடியோவை!'' என்று எரிந்து விழுந்தான். ''பாக்டரியில் புரொடக்ஷனையே காணோம். விளம்பரம் மட்டும் விடாமல் அலறுது! நாளைக்கு முதல்வேலையா விளம்பர ஏஜென்சிக்கு ஃபோன் பண்ணி இதை நிறுத்தச் சொல்லணும்!''

வைத்தியலிங்கம் தாம் படித்துக் கொண்டிருந்த திருப்புகழ் வாரியார் விரிவுரை புத்தகத்தை மூடி வைத்து விட்டு நிமிர்ந்தார். ''ஓ! மானேஜிங் டைரக்டரா? பின்னோடு ஆனந்த் ஸாரும் வந்திருக்காரா? ஆமா, நீங்க ஒருவரை ஒருவர் சந்திக்காமல் இருப்பது நல்லதுன்னு சொன்னேன் போலிருக்கே'' என்றார் சத்யாவைப் பார்த்து.

''அதெப்படியப்பா முடியும்? ஆனந்த் என்னோட பெஸ்ட் ஃபிரெண்ட். அவனைச் சந்திக்கப் பேசாமல் எப்படி இருப்பேன் நான்?'' என்றான் சத்யா.

''ஓ! அப்படியா! அது சரி, ஸ்ட்ரைக் எத்தனை நாளா நீடிக்கிறது? உடன்பாடு ஏதாவது நடக்கப் போறதா இல்லையா?''

''ஸார்!'' என்று இடைமறித்துப் பேசினான் ஆனந்த்: ''அன்னைக்கு முதலாளித்துவம் ஒழிகன்னு உங்க முன்னாடியே கோஷம் போட்டானே உங்க மகன்! இன்னைக்குப் போடச் சொல்லுங்க பார்ப்போம்!''

''ஆமாம்ப்பா! நான் அடியோடு மாறிட்டேன். தொழிலாளர்கள்கிட்டே அனுதாபமே காட்டக் கூடாதுன்னு தீர்மானிச்சுட்டேன். உங்களுக்குச் சந்தோஷம்தானே?'' என்றான் சத்யா.

''என் சந்தோஷம் கிடக்கட்டும்டா. அவங்க உன் அனுதாபத்தை இழக்கிற மாதிரி அப்படி என்ன செய்துட்டாங்க? அதைச் சொல்லு!''

''இருபது பர்ஸென்ட் போனஸ் கேட்கிறாங்க, அப்பா.''

''நீ என்ன சொன்னே?''

''சட்டப்படி குறைந்த பட்ச போனஸான எய்ட் அண்டு ஒன்தர்ட் தருவேன்னேன்.''

''அதற்கு அவங்க ஒப்புக் கொள்ளலையாக்கும்?''

''எப்படி ஒப்புக் கொள்வார்கள்?'' என்றான் ஆனந்த். ''இவங்களுக்கு மேற்கொண்டு அதிகமாகப் போனஸ் வாங்கிக் கொடுத்தால் தானே அதில் யூனியன் தலைவர் பங்கு கேட்க முடியும்? அதனால் வேலைநிறுத்தத்தைத் தூண்டி விட்டுட்டான்!''

''ஆனா நான் விட்டுக் கொடுக்கலை, அப்பா! கம்பெனி ரொம்ப நஷ்டப்படுது; அதனாலே குறைந்தபட்ச போனஸுக்கு மேல் தர முடியாதுன்னு சொல்லிட்டேன்.''

''நஷ்டமா? நம்ம கம்பெனிக்கா? ஏன்? எதனால்?'' என்று பதறினாள் உரையாடலைக் கேட்டுக் கொண்டே வந்த தனபாக்கியம்.

''என்னா, ரா மெடீரியல் விலைகள் ஏறிட்டுது; ஓவர்ஹெட்ஸ் அதிகமாயிடுத்து'' என்றான் சத்யா.

''அதோடு நிர்வாகத்தில் இருப்பவருடைய ஊதாரித்தனமும் சேர்ந்துடுச்சு. திறமையற்ற நிர்வாகம் மட்டுமின்றித் திருட்டுத்தனமும் நடந்திருக்கு'' என்றார் வைத்தியலிங்கம்.

''என்ன ஸார் இது? நீங்களே தொழிற் சங்கத் தலைவர் மாதிரி தாறுமாறாப் பேசறீங்க!'' என்றான் ஆனந்த். சத்யாவின் முகம் கோபத்தில் சிவந்தது. ''பாலன்ஸ் ஷீட்டை வேணும்னா பாருங்களேன் அப்பா!'' என்றான்.

''தொழிற்சங்கத் தலைவர் கிட்டே காட்டினியா?'' என்றார் வைத்தியலிங்கம்.



'பழசு, இனி தேவையில்லை' என்று ஓராண்டில் நிராகரிக்கப்படும் கார்களின் எண்ணிக்கை மேற்கு ஜெர்மனியில் பதினைந்து லட்சம். இந்தக் கார் குப்பை மலையாகக் குவிகிறது. எனவே இவற்றை நொறுக்கி, மிதித்து, பொடியாக்கி, ஓரளவு சுத்திகரிப்பு செய்து, எஃகு ஆலைகளுக்கு அனுப்புகிறார்கள். அங்கே அது, மீண்டும் புதிய எஃகுத் தகடாக உருமாறுகிறது. அந்நாடு முழுவதும் இருபது கார் பொடி செய்யும் ஆலைகள் உள்ளன. ஒரு மணி நேரத்தில் இவை 70 கார்களை நொறுக்குகின்றன. படத்தில் ஒரு கிரேன் ஒரு காரை அலாக்காகத் தூக்கிப் பொடி செய்யும் இயந்திரத்துக்குள் போடப் போகிறது!

நன்றி: ஸ்காலா

''காட்டினேன்.''

''என்ன சொன்னார்?''

''பாலன்ஸ் ஷீட்டையே அவர் நம்ப மாட்டாராம்! குக் அப் பண்ணியிருப்பதாகச் சொல்றான், மடையன்!''

''நானும் ஒரு மடையன்தான்; ஏன்னா நானும் அதைத்தான் சொல்றேன்'' என்றார் வைத்தியலிங்கம்.

''ஸார் நீங்க இப்படிப் பேசறது நல்லா இல்லே'' என்றான் ஆனந்த்.

''யூ கீப் அவுட் ஆஃப் திஸ்! திஸ் இஸ் மை ஃபாமிலி மேட்டர்!'' என்று ஆனந்தைப் பார்த்து இரைந்தார் வைத்தியலிங்கம்.

''குடும்ப விஷயத்தில் அயல் மனுஷன் தலையிடக்கூடாது என்கிறீங்க. ஆனால் அயல் மனுஷன் சொன்னதைக் கேட்டுத்தானே உங்க சொந்த மகனை இப்படி விரட்டறீங்க?'' என்றான் ஆனந்த்.

வைத்தியலிங்கம் துணுக்குற்றார். ''நீ என்ன சொல்றே?'' என்றார். ''யார் அந்த மூணாவது மனுஷன்?''

''அருள்ராஜும் அவர் மகன் தீபக் பாலும் தான். அவங்களைப் பத்தித்தான் பேசறேன். அவங்கதானே உங்களிடம் இல்லாததையும் பொல்லாததையும் கூறி உங்க மனசைக் கலைச்சு உங்க மகனுக்கெதிராகவே உங்களைத் திருப்பி விட்டிருக்காங்க!''

''அவங்களை அந்நியர்களா நான் நினைக்கலை. அருள்ராஜ் என் தொழிலகத்தில் ஆரம்ப முதல் இருந்திருக்கிறான்.''

''ஆக, பெற்ற மகனை விட வேலைக்காரப் பயலும் அவன் மகனும் உங்களுக்கு உயர்வாப் போயிட்டாங்க இல்லையா?'' என்றான் சத்யா.

''இதோ வரார் ஸார், உங்க மாப்பிள்ளை! டேய் சத்யா! இவருக்கு நல்லா ஜல்லா போட்டிருக்கான்டா தீபக். உன் தங்கச்சியைக் கட்டிக்கிட்டு அப்படியே கம்பெனியையும் கவிகரிச்சுக்கிட்டுப் போயிடலாம்னு திட்டம் போட்டிருக்கான். இதற்காக இவனேதான் தொழிலாளர்களையும் சங்கத் தலைவரையும் உனக்கு எதிராத் தூண்டி விட்டிருக்கான், சந்தேகமே யில்லை!''

''ஆமாமாம்; இல்லாத போனால் ஒரு மாசம் முன்னால் கூட என்னை மனமாரப் பாராட்டி விட்டுப் போன காளமேகம், என்னால் எவ்வளவோ பயனடைந்திருக்கும் அவர், ஏன் திடீரென்று எனக்கு எதிரா மாறணும்?''

''வாப்பா தீபக்!'' என்று வந்தவனைச் சோகமாக வரவேற்றார் வைத்தியலிங்கம். ''சரியான சமயம் பார்த்துத்தான் வந்திருக்கே. இந்த நாடகத்தையெல்லாம் பார்த்தியா, கேட்டியா?''

''கேட்டேன் ஸார்! நல்லாக் கேட்டுட்டேன். ஐ ஃபீல் வெரி ஸாரி. நான் வரேன்.''

''எங்கே போறே? நான் கேட்கிறதுக்குப் பதில் சொல்லிட்டுப் போ!''

''வேண்டாம் ஸார்! ஏற்கெனவே என் மீதும் அப்பா மீதும் சத்யாவுக்கு ஒரே வெறுப்பு. என்னை வெறுத்தால் கூட நான் கவலைப்படமாட்டேன். ஆனா அது காரணமா கலாவிடம் நான் கொண்டிருக்கும் பரிசுத்தமான காதலை அவர் சந்தேகித்து உள்நோக்கமெல்லாம் கற்பிக்கிறாரே, அதை என்னால் தாங்கிக்கவே முடியலை. இப்ப நான் மேற்கொண்டு ஏதாவது பேசப்போனால் அப்பாவுக்கும் பிள்ளைக்குமிடையில் மேலும் மனஸ்தாபம் வளர நான் காரணமாகி விடுவேன். அந்தப் பாவம் எனக்கு வேண்டாம்!''

''தீபக்! உன் அப்பா என்னிடம் வைத்துள்ள விசுவாசத்தின் மேல் ஆணை! நீ நகரக் கூடாது நில்லு!'' என்று உத்தரவு போட்டார் வைத்தியலிங்கம். ''நான் கேட்பதற்கு ஒளிவு மறைவு இல்லாமல் பதில் சொல்! என் மகன் அகிலா எண்டர்பிரைஸஸ் மானேஜிங் டைரக்டர் என்கிற முறையில் நல்ல பெயர் எடுத்திருக்கிறானா? நியாயமாக நடந்து கொள்கிறானா? உன் அப்பா என்ன நினைக்கிறார்? சொல்லு!''

தீபக் பால் நெளிந்தும் கால்மாறி வைத்தும் சங்கடப்பட்டான். கைகளைப் பிசைந்தான். ''ஸார்... இது வந்து... எனக்கு ரொம்ப தர்ம சங்கடம் ஸார்...'' என்று அவன் தயங்கவும், வைத்தியலிங்கம் உடலெல்லாம் நடுங்கக் கோபாவேசத்துடன் எழுந்து, ''பதில் சொல் யூடா ராஸ்கல்! ஆன்ஸர் மீ ஐ ஸே'' என்று கத்தினார்.

(தொடரும்)



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

'மெய்யான காதலா, அல்லது தாற்காலிக மோகமா?'

இந்த எண்ணம்தான் அவர்களைக் குழப்பியதே தவிர, ஜாதிப் பிரச்னை பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. நாட்டில் பலபெண்கள் வயதுக்கு வருமுன்னரே கூடத் திருமணம் செய்து கொண்டார்கள். என்பது வாஸ்தவம்தான். என்றாலும் லக்ஷ்மிக்கு அப்படியொன்றும் ரொம்ப வயதாகி விடவில்லை. பதினைந்துதான்.

தனித்தனியே காந்தியும் ஸி. ஆரும் அவளிடம் பேசினர். லக்ஷ்மி தான் மனத் தெளிவுடன் இருப்பதாகத் தெரியப் படுத்தினாள். ''அப்படியானால் இது சத்தியமான உணர்வுதானா என்பதைச் சோதித்துப் பார்'' என்று அவளிடம் சொன்னார்கள். ''காத்திரு, தேவதாஸைச் சந்திக்காதே, கடிதங்கள் எழுதாதே!''

இருபத்தேழு வயதான தேவதாஸிடமும் இவ்வாறே அழுத்தமான கோரிக்கை பிறப்பிக்கப்பட்டது. நிபந்தனையை ஏற்று அவர் வட இந்தியா திரும்பினார். ஆணைகளுக்குக் கீழ்ப்படிந்து அவரும் லக்ஷ்மியும் கிட்டத்தட்ட நாலு ஆண்டுகள் பெற்றோரின் சம்மதத்துக்காகக் காத்திருந்தனர். கல்யாணம் நடக்க மேலும் இரு ஆண்டுகள் பொறுத்திருந்தனர்.

இதற்கிடையில் கதர் பிரசாரத்துக்காக இலங்கை செல்ல வேண்டியிருந்தது. லக்ஷ்மியை உடன் அழைத்துக் கொண்டு ஸி. ஆர். மகாத்மாவுக்கு முன்னதாகவே அங்கே போய்ச் சேர்ந்தார். அந்தத் தீவுக்கு அதுவே அவரது முதல் விஜயம்.

'கதர் நிதிக்கு நன்கொடைகள் வசூலிப்பது ஒன்று மட்டுமே மகாத்மாவின் விஜயத்துக்குக் காரணம், வேறு அரசியல் நோக்கம் ஏதுமில்லை' என்று அதிகாரிகளிடம் ஸி. ஆர். உறுதியளித்தார். ஒரு லட்சம் வசூலிக்க முடியும் என்று தாம் நம்புவதாகத் தெரியப் படுத்தினார்.

நவம்பர் பதினாலாம் தேதி கொழும்புத் துறைமுகத்துக்கு சின்கோவோ என்ற கப்பலில் மகாத்மாவும் கஸ்தூரிபாவும் வந்தனர். கப்பலை எதிர் கொள்ளப் புறப்பட்ட ஒரு விசைப்படகில் சமுத்து வரவேற்புக் குழுவினருடன் ஸி. ஆரும் சென்றார்.

இதையடுத்து பதினைந்து நாட்களுக்கு காந்தியும் அவரது குழுவினரும் இலங்கையில் கிழக்குக் கடற்கரைப் பகுதி தவிர மற்ற எல்லா இடங்களிலும் சுற்றுப்பயணம் செய்தனர். 'இதற்கு முன் கண்டறியாத அளவில் வெற்றிகரமான யாத்திரை' என்று ஸி.ஆர். அதனை வர்ணித்தார்.

பக்தியும் அன்பும் கலந்து, சென்ற இடமெல்லாம் வரவேற்கப்பட்ட மகாத்மா, அப்பட்டமாகப் பேசும் தமது இயல்பை மாற்றிக் கொள்ளவில்லை. கொழும்புவில் இந்திய வர்த்தகர்களிடையே அவர் சொன்னார்:

''உங்களுடைய தராசுகள் முற்றிலும் நேர்மையானவையாக இருக்கட்டும்; உங்களுடைய கணக்குகள் சரியானவையாக விளங்கட்டும்; இந்தத் தீவில் வசிக்கும் ஒவ்வொரு பெண்மணியையும் நீங்கள் உங்களுடைய சொந்தத் தாய், அல்லது சகோதரியாகப் பாவிப்பீர்கள் என்று நம்புகிறேன்.''

செயற்கையான ஆடம்பர அலங்காரங்களுடன், தர்பார் மண்டபம் போன்ற பெரிய வரவேற்பு அறை ஒன்றில் கூடியிருந்த சிங்களப் பெண்மணிகளைப் பார்த்து மகாத்மா சொன்னார்:

''ஏராளமான நகைகளை அணிந்து வரும் என் சகோதரிகளைப் பார்க்கும் போதெல்லாம் பசிமிக்க எனது கண்கள் அவர்களுடைய நகைகள் மீதே நிலைக்கின்றன. நகைகளால் இனி அலங்கரித்துக் கொள்வதில்லை என்று உறுதி பூணுங்கள். தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்யும் உங்கள் சகோதரிகளின் கண்ணராவியான நிலை உங்களுக்குத் தெரியுமா? அவர்களுக்குச் சேவை புரிவதில் உங்கள் கௌரவம் நிலைக்கட்டும். அவ்விதம் நீங்கள் ஆற்றும் சேவை, இப்போது நீங்கள் அணிந்துள்ளவற்றை விடச் சிறந்தவையான புகழாபரணங்களை உங்களுக்குக் கொணர்ந்து சேர்க்கும்.''



கண்டியிலிருந்து படுல்லாவுக்குப் போகும் வழி இயற்கை எழில் மிக்கதாக இருந்தது. ''இதற்கு முன் நான் பார்த்திராத அளவில் அழகுடன் சில பகுதிகள் விளங்குகின்றன'' என்று காந்தி சொன்னார். அந்தப் பிரதேசத்தில் வாழ்ந்த தமிழர்களான தேயிலைத் தொழிலாளர்கள் மகாத்மாவைக் காண பல்லாயிரக் கணக்கில் சாரி சாரியாக வந்த வண்ணமிருந்தனர். இதைக் குறிப்பிட்டு எழுதிய ஸி. ஆர்., ''மலைச் சரிவுகளெல்லாம் மக்கள் மயமாயின'' என்று வர்ணித்தார்.

அவர்களைப் பார்த்து மகாத்மா கூறினார்: ''உங்களுக்கு இங்கே இயற்கை எழிலானது குற்றமற்ற போதையை உண்டாக்குகிறது. சுவாசிப்பதற்கு ஏற்றதாக நல்ல சக்தியூட்டும் காற்று இருக்கிறது. இவ்வாறிருக்கும் போது போதையூட்டும் மதுவை நாடுவது பெருங் குற்றமாகும். மது, பளபளத்து மின்னினாலும் கொடிய விஷமே.''

மதுப்பழக்கமும் குடும்ப வாழ்வில் கட்டுப்பாடு இன்மையும் பல தமிழர்களின் வாழ்க்கையைப் பாழடித்திருந்தது. ஒரு தேயிலைத் தோட்டத் தொழிலாளி ஸி. ஆரிடம் சொன்னார்:

''கதரினால் எந்த அளவுக்கு வருமானம் கிடைக்குமோ அந்த அளவுக்கு எங்களுக்குத் தமிழ்நாட்டில் வருமானம் கிடைத்திருந்தாலும் போதும், நாங்கள் முன்பின் அறியாத இந்தத் தேசத்துக்குப் பயணப்பட்டிருக்க மாட்டோம்; பிச்சைக் காசுக்காக இந்த நரக வாழ்வைத் தேடிக் கொண்டிருக்க மாட்டோம்.''

சுற்றுப் பயணத்தின் கடைசிக் கட்டத்தில் —ஜாஃப்னாவில் — ஒரு லட்சம் என்ற இலக்கினைத் தாண்டி விட்டனர். இதைத் தவிர கதர் ஏற்றுமதிக்கு நிறைய அச்சாரம் பெற்றிருந்தார் ஸி. ஆர்.

நவம்பர் முப்பதாம் தேதி இந்தியக் கடற்கரையை அடைந்தனர். மகாத்மா ஆந்திராவுக்கும் அங்கிருந்து ஒரிஸ்ஸாவுக்கும் பயணப்பட்டார். ஸி. ஆர். தமது ஆசிரமத்துக்குத் திரும்பினார். குருவும் சீடருமாக மட்டுமின்றி சகாக்களாகவும் விளங்கிய அவ்விருவரும் ஏழு மாத காலம் சேர்ந்து இருந்து வந்தனர். இதற்கு முன்னும் சரி, பின்னரும் சரி அவர்கள் இவ்வளவு நீண்ட காலம் சேர்ந்திருந்ததில்லை.

## 28. பார்டோலியில் அற்புத வெற்றி

ஆசிரமம் மூன்றாண்டு காலமாக நடைபெற்று வந்தது. மகாத்மாவின் கருத்துப்படி அது நிதானமாக ஆனால் நிச்சயமாக மக்களிடையே ஊடுருவி நன்மை புரிந்து வந்தது. இந்தக் கால கட்டம் முழுவதிலும் ஸி. ஆர். தீவிரமாக உழைத்து வந்தார். சந்தனக் கட்டை போல் அவர் தேய்ந்து வருவதாக மகாத்மா கருதினார். ஆனால் பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து நடந்த போராட்டத்தில் இந்தத் தீவிரம் காணப்படவில்லை. மூன்றாண்டுகள் அமைதியாகவே ஓடிவிட்டன.

செயலூக்கம் காணப்படவில்லை என்பதால் ஆயத்தங்கள் ஏதும் நடக்கவில்லை என்பது அர்த்தமல்ல. தாமும் தமது தலைவரும் தமது சகாக்களும் பீரங்கிகளைத் தயாரித்துக் கொண்டிருப்பதாக முன்பே ஸி. ஆர். கூறியிருந்தார். துன்பத்தைச் சகிக்கும் ஆற்றலை அதிகரித்துக் கொள்வதே அவர்களுடைய ஆயுதம். 1926, 27ம் ஆண்டுகளில் இந்த கைய பீரங்கிகள் மேன்மேலும் அதிகமாகத் தயாரிக்கப்பட்டன.

அமைதியாக இருந்த அரசியல் சூழலை பிரிட்டிஷ் அரசு தன்னை அறியாமல் உசுப்பி விட்டுவிட்டது. 1927 நவம்பரில் மகாத்மாவும் ஸி. ஆரும் மங்களூரிலிருந்தார்கள். இலங்கைப் பயணத்தை மேற்கொள்ளவிருந்தார்கள். இச்சமயத்தில் வைஸ்ராயிடமிருந்து காந்திக்கு அழைப்பு வந்தது.

தெற்கே வெகு தூரத்திலிருந்து தில்லி வந்து சேர்ந்த மகாத்மாவிடம் ஸைமன் கமிஷன் அமைக்கப் பட்டிருப்பதாகவும் ஸர் ஜான் ஸைமன் தலைமையில் அக்குழு இந்தியா முழுவதும் சுற்றிவரும் என்றும் பின்னர் அரசியல் சட்ட மாறுதல்களை சிபாரிசு செய்யும் என்றும் வைஸ்ராய் இர்வின் பிரபு கூறினார். ''இந்தத் துண்டுச் செய்தியை ஒரு அணா தபால் செலவில் உறையிலிட்டு எனக்கு அனுப்பியிருக்கலாமே'' என்று வைஸ்ராயிடம் கூறிய காந்தி, ஸி. ஆரிடம் திரும்பி வந்தார். பிறகு இருவரும் இலங்கைக்குப் பயணமானார்கள். (தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்



---

'பூகம்பம்' என்ற ஆங்கிலப்படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள், அமெரிக்காவிலுள்ள ஸால்ட் லேக் ஸிடி ரசிகர்கள். திடீரென்று அவர்கள் அமர்ந்திருந்த நாற்காலிகள் ஆடின. 'அடடா! என்ன ஸ்பெஷல் எஃபெக்ட்! நிஜமாகவே பூகம்பத்தை உண்டாகும்படி செய்திருக்கிறார்களே!' என்று வியந்தபடி படம் பார்த்தார்கள்.

மறுநாள் செய்தித் தாளைப் பார்க்கும் போதுதான் அவர்களுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. அவர்கள் அனுபவித்தது உண்மையான பூகம்பத்தைத்தான்! அதுவரை அங்கே ஏற்பட்ட பூகம்பங் களிலேயே அதிக உக்கிரமானது. ஆனால் யாருக்கும், எதற்கும் கொஞ்சமும் சேதம் விளைவிக்காத பூகம்பம்!

சாகா. - பிரபு.



# மலைப்புள்

வாதூலன்

காலை வேளை. திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். யார் யார் தெரு வழியாகப் போகிறார்கள் என்பதைப் பார்ப்பதில் கவனம் நிலைத்தது.

அதில் உள்ள சுவாரசியம்...

''எலே சத்யம்! இங்கே வா!''

தயங்கியபடியே என் முன் வந்து நின்றான். கை நிறைய வாழைப் பழங்கள், கூட வெற்றிலை பூ போன்ற 'மங்கலப் பொருள்கள்.'

''என்ன? கமலாவைப் பெண் பார்க்க வராப்பலே இருக்கு இன்னிக்கு? பேஷ்!''

''ஆமாம் மாமா! வரட்டுமா, வேலை இருக்கு!'' என்று நழுவ முயன்றான்.

''இருடா கொஞ்சம். விசேஷம்லாம் கேட்கட்டும்'' என அவனை வலுக்கட்டாயமாக நிறுத்தினேன். அக்கம் பக்கம் பார்த்தேன். குரலைச் சற்றுத் தாழ்த்திக் கொண்டு, ''மீரா அக்காவுக்குச் சொல்லி அனுப்பிச்சாச்சோ இல்லையோ? அவளும் வந்திருக்காளா! அட... மூத்தாள் மாட்டு வண்டியிலே வந்து இறங்கறாளே!''

சத்யம் முகத்தில் ஒரு விதச் சங்கடம் தெளிவாகத் தெரிந்தது. பதில் சொல்லவில்லை. மௌனமாக நின்றான்.

''போகட்டும் போ! ஜாத் விட்டு ஜாதி கல்யாணம் பண்ணினாலும் உறவு விட்டுப் போகலியே! மீராதானே மூத்த பொண்ணு லட்சணமா கல்யாணத்தை நடத்தி வைக்கணும்!''

''அப்பா!'' என்று குரல் பின்னாலிருந்து கேட்டது. திரும்பினேன். உமா. எரிச்சலுடன் என்னைப் பார்த்தாள். ''ஏன் இந்த வம்பு காலை வேளையில்?'' என்று கேள்வி அந்தப் பார்வையில் பிரதிபலித்தது.

உள்ளே வந்தேன். ரேடியோ தினமணி பேப்பர், குளியல், பூஜை, சாப்பாடு...

ஈஸிசேரில் சாய்ந்து கொண்டேன். அப்பா, அந்தச் சுகம்! இலேசாகக் கண் அயர்ந்தேனோ என்னமோ? அதற்குள் யாரோ கதவைத் தட்டினார்கள்.

திறந்தேன்.

'ப்ரீப்' கேஸும் பையுமாக ஓர் இளைஞன் — நடுத்தர வயதுக்கும் மேலென்று சொல்லலாமோ — நின்றிருந்தான். யார் இது? எங்கோ பார்த்த மாதிரி இருக்கிறது. ஆ... புதிதாகத் திறந்த பாங்க் கிளையின் ஏஜெண்ட். அந்த ஜாடை!... ஆ... தெரிந்து விட்டது...






## பச்சைக்கொடி கொண்டா!

நாடியா ஜில்லாவில் உள்ள கிருஷ்ணநகர் என்ற இடத்தில் ஒரு ரயில் பாதை துவக்க விழாவிற்குச் சென்றிருந்தார் மத்திய ரயில்வே அமைச்சர் திரு. மது தந்தவதே. விழாவுக்கு தலைமை, அமைச்சர். துவக்கம் மேற்கு வங்காள முதலமைச்சர் திரு. ஜோதி பாசு. அப்போது அங்கு எல்லா இடங்களும் சிவப்பு நிறக் கொடிகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தது.

இதைக் கண்ட மத்திய அமைச்சர் நகைச் சுவையாகக் குறிப்பிட்டார்.

"எல்லாமே சிவப்பாக இருந்தால் ரயில்கள் எப்படிப் போகும்? பச்சைக் கொடிகளும் இருந்தால் தானே ரயில்கள் போக முடியும்."

அவர் அருகில் இருந்த திரு. ஜோதிபாசுவும் மறுப்புத் தெரிவிக்காமல் சிரித்து விட்டார். தகவல்: - சங்கரிபுத்திரன்"

---

"வா உட்கார். நீ சங்கரன் மருமான் தானே?" என்று பளிச்சென்று கேட்டு விட்டேன்.

அவன் முகமெல்லாம் மலர்ச்சி. இவர் தெரிந்தவராகப் போய் விட்டார் என்று உணர்ந்த சந்தோஷம். "உங்களுக்குத் தெரியுமா அவரை."

"தெரியுமாவா? நான் அறிஞ்சு வளர்ந்த வன்னு அவன்!" என்றவன் சற்றே குரலைத் தாழ்த்தி "உன் மாமா — அதான் சங்கரன் அம்பது வயசுக்கு மேலே ஒரு கல்யாணம் செய்து கொண்டானே — அவனைக் கேக்கறேன்! எப்படி இருக்கான்?"

அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. நாற்காலியில் நெளிந்தான். கூடத்தில் மாட்டப்பட்டிருந்த புகைப்படங்கள் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான்.

"ரொம்ப அநியாயம். அதுவும் வயசுக்கு வந்த பெண் இருக்கறப்போ, லக்ஷ்மி மாதிரி மூத்தவள் இருக்கறப்போ புத்தி கெட்டுப் போய்த் தன் கிழே வேலை பார்த்த ஸ்டெனோவைப் பண்ணிக் கொண்டான். கேட்டால், முதல் மனைவி சம்மதம் தந்தாள் என்கிறான். இவன் வற்புறுத்தினால், அவள் என்ன செய்வாள் பாவம். ம்... அந்த மோகினிக்கே குழந்தை இருக்கு இல்லே?"

"உம்."

டெபாஸிட், பாங்க் வளர்ச்சி எல்லாம் முற்றும் மறந்தவனாக அவன் விடைபெற்றான். நான் காலை நீட்டிக் கொண்டேன். சாவகாசமாய் இன்னொரு தரம் பேப்பரைப் படித்தேன். வரவர 'பேப்பரி'ல் சுவாரசியமே இல்லை. ரொம்ப மோசம்.

வெயில் கண்ணை இறுக்கியது. விழித்த போது, உமா தயாராகக் காப்பியுடன் நின்றிருந்தாள்.

"பாவம் உனக்குச் சிரமம். நாளைக்குச் சமையல்கார மாமியை வரச் சொல்லி விடுகிறேன். ஏதோ கல்யாணத்துக்குப் போனாள்... வரக் காணோம்!"

"இது ஒரு சிரமமா எனக்கு!" உமா வறட்சியாகச் சிரித்தாள். உதட்டைக் கடித்துக் கொண்டாள். காப்பித் தம்ளருடன் உள்ளே போனாள்.

காற்றாட வெளியே வந்தேன். கொஞ்ச தூரம் நடப்பதற்குள் நாலைந்து விசாரிப்புக்கள், கேள்விகள்... எதிரே மூலையில் ஒரு வீட்டில் பந்தல் போடப்பட்டிருந்தது. அட!

"நாணு இங்கே வா!" என்று கூப்பிட்டேன் — வெளியில் நின்றபடியே.

"என்ன விசேஷம்?"

நாணு தலை குனிந்து நின்றான். "பிள்ளைக்குக் கல்யாண நிச்சயதார்த்தம். பெண் தெரிஞ்சவர்கள்தான்... கல்லிடைக் குறிச்சி கிருஷ்ண மூர்த்தியோட..."

"பேஷ் பேஷ்... பெரிய இடம்தான்! சரி! எனக்குத்தான் முன்னாலே தெரிவிக்கலை! போகட்டும்... உன் சீமந்த புத்திரிக்காவது சொன்னாயோ? வந்திருக்கிறாளா! எனக்கும் பார்க்கணுமே!"

நாணுவின் கண்ணில் நீர் முட்டித் திரண்டது. துண்டால் அதைத் துடைத்துக் கொண்டான்.

நாணுவின் பெண் கொஞ்ச காலத்துக்கு முன் எவனையோ இழுத்துக் கொண்டு ஓடிப் போனதும், ரிஜிஸ்தர் மாரேஜ் செய்து கொண்டதும் ஊர்ப் பிரசித்தம்...

"சொல்லுடா? அவள்தானே கல்யாணத்திலே மூணுவது முடிச்சுப் போடணும். வந்து இருக்கிறாளா?"

நாணு பதில் சொல்லவில்லை. சொல்ல முடியவில்லை. அவன் தவிப்பை ஓரக் கண்ணால் பார்த்தபடியே, திரும்பினேன்.

இரவு. ஒன்பது மணி நியூஸைக் கேட்டு விட்டுப் பூஜை அறைக்குள் நுழைந்தேன். படுக்கப் போகுமுன் ஒரு ஸர்க்கமாவது சுந்தர காண்டம் வாசித்து விடுவேன். அது என் வழக்கம்...

முதலில் ஸ்லோகம்.

"யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம் —"

நிழலாடியது. ஓசைப் படாமல் யாரோ வருவது தெரிந்தது. நிமிர்ந்தேன். உமா, என்ன ஏது என்று கேட்குமுன், என்னை விழுந்து நமஸ்காரம் பண்ணினாள்...

"நாளைக்கே ஊருக்குக் கிளம்பறேனப்பா!"

"என்னம்மா சொல்றே? நீ இருக்கிறது ஒன்றுதான் எனக்கு ஆறுதல். என்னோட நிலை தெரிஞ்சுமா இப்படிச் சீக்கிரம் கிளம்பறே?"

அவள் உடனே பதில் சொல்லவில்லை. பூஜை அறையிலிருந்த 'படங்களை உற்றுப் பார்த்தாள். அவள் கண்கள் கலங்கின.

''என்ன புஸ்தகம்?''

''சுந்தர காண்டம். வழக்கமாகப் படிப்பது தானே? இன்று என்ன ஸர்க்கம் தெரியுமோ? சீதையை அரக்கிகள் துன்பப்படுத்துகிற கட்டம். பாவம் திரிஜடைதான் —''

உமா குறுக்கிட்டாள். ''உங்களுக்கும் அந்த ராக்ஷஸர்களுக்கும் என்னப்பா வித்தியாசம்? நீங்கள் மனசால் வதைக்கிறீர்கள்!''

நான் ஸ்தம்பித்துப் போனேன். உமாவுக்கு இன்று என்னமோ ஆகி விட்டது. கடவுளே, என்னைச் சோதனை செய்யாதே. நான் அனுபவித்தது போதும்...

''உமா!'' குரல் நடுங்கியது. கண்களில் நீர் கொப்புளித்தது.

''ஆமாம் அப்பா! சீதையை அரக்கிகள் எப்படிச் சித்திரவதை செய்தார்களோ எனக்குத் தெரியாது. ஆனால் நீங்கள், ஊரில் இருப்பவர்களை மனசால் குத்திக் கிளறுவதை நேரில் பார்க்கிறேன்! பாவம், ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு கஷ்டம். அந்தக் கஷ்டத்தை மேலும் அதிகரிக்கும்படி, திரும்பத் திரும்பக் கேள்வி கேட்டு; அவர்களைப் புண்படுத்துவதில் உங்களுக்கு என்ன சந்தோஷம்? உங்களைத் திருப்பிக் கேட்க அவர்களுக்கு எத்தனை நாழி ஆகும்? ஆனால் கேட்க மாட்டார்கள். ஊரிலே பெரிய பண்ணையார் ஆச்சே! உங்கள் முதுகுக்குப் பின்னால் பேசிக் கொள்ளுவார்கள்.''

சுந்தர காண்டத்தை மூடிக் கீழே வைத்தேன். மனசுக்குள் குமுறினேன். உமாவின் ஒவ்வொரு வார்த்தையும் என்னை அம்பாகத் தைத்தது.

அவள் மேலும் தொடர்ந்தாள். ''உங்கள் கஷ்டம் எனக்குத் தெரியும். ஒரே பிள்ளை பார்ஸிக்காரியைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டான். அந்தக் கவலையை மறைப்பதற்காக, என்னை ரொம்பப் பெரிய இடமாக — பெரிய இடம் அவள் இகழ்ச்சியாகச் சிரித்தாள் — பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தீர்கள். என்ன போதாத காலமோ, ஆறே மாசத்தில் வாழாவெட்டியாகத் திரும்பினேன். அந்த ஏக்கத்திலேயே அம்மா செத்துப் போனாள். உங்களுக்குத் தான் ரொம்ப கஷ்டம். எனக்குப் புரியறது. ஆனால் அதுக்காக 'இந்த மாதிரி யாருக்கும் வரக் கூடாது' என்றல்லவா வேண்டிக் கொள்ள வேண்டும்! நீங்கள் என்னவென்றால் அது மாதிரி யாருக்காவது கஷ்டம் ஏற்பட்டால் சந்தோஷப்படுகிறீர்கள்! மேலும் குத்திப் புண்ணை ரணகாயப் படுத்துகிறீர்கள்! இதில் என்ன கிடைக்கிறது அப்பா உங்களுக்கு? சுந்தர காண்டமோ, சுந்தரலங்காரமோ என்ன படிச்சுத்தான் என்ன பிரயோஜனம்!'' முடிக்கும்போது அவளாலேயே தாள முடியவில்லை அழுது விட்டாள்.

''என்னை மன்னிச்சுடு; உமா மன்னிச்சுடு!'' என்று விசித்தேன். புஸ்தகத்தை எடுத்து அவளிடம் கொடுத்தேன். ''நீயே படி, எனக்குத் தொடக்கூட யோக்கியதை இல்லை!''

# அவன் போட்ட கணக்கொன்று!

எஸ். கோபால்

சமையலறையிலிருந்து பார்கவி தந்த காப்பியை உறிஞ்சிக் கொண்டே முன் ஹாலுக்குவந்த என்னை மேஜையின்மேலிருந்த வாரப் பத்திரிகை சுண்டி இழுத்தது. இன்னும் அரைமணி நேரமாவது அதை இந்தக் குளிரில், ஜன்னல் அருகில் சூரிய ஒளியில் குளித்துக் கொண்டே படிப்பது சுகமாகத்தான் இருக்கும். கதைகளையெல்லாம் படிப்பதற்கு இப்போது நேரம் இல்லை. அரக்கப் பரக்க அள்ளிப் போட்டுக்கொண்டு ஓடவே சரியாக இருக்கும்.

இருக்கும் இந்த ஐந்து நிமிடங்களில் எதையாவது பார்க்கலாம் என்று புரட்டினேன்: அப்போதுதான் அந்த விளம்பரம் கண்ணில் குத்தி, மனத்தில் போய்த் தைத்தது.

அதை நான் ரசிக்காமல் வெறுத்ததற்குக் காரணம் உண்டு. அதில் சிரித்துக் கொண்டே வேறோர் ஆடவன் மேல் சாய்ந்து கொண்டிருந்தவள் என் மனைவிதானய்யா-- என் மனைவியே தான்! எப்படி இருக்கும் எனக்கு? ஒரு வேளை அவளாக இல்லாமல் வேறொருத்தியாக இருந்திருந்தால் ரசித்திருப்பேனோ என்னவோ? மிகச் சாதாரணமான மனித பலவீனம் என்னுள்ளும் வளர்ந்து விட்டிருந்தது.

படம் அழகாக இருந்தது. என்னைப்போல் எத்தனை கண்கள் இவளை ரசித்துக் கொண்டிருக்குமோ? மூவர்ண ஆஃப்செட் கண்களைச் சுண்டித்தான் இழுத்தது: இத்தனைக்கும் அது 'ஆப்டர் ஷேவ் லோஷன்' விளம்பரம். இவனுக்கு என்ன வேலை அதில்? கோபம் மனத்தை அரித்தது.

அப்படியொன்றும் இதுதான் முதல் தடவை என்று சொல்ல முடியாது. இரண்டு மூன்று முன்ற வெவ்வேறு பத்திரிகைகளில் மூன்று மாதங்களாகவே பார்த்துக் கொண்டிருக்கிறேனே. அவள் 'மாடலிங்'காக இருப்பது எனக்குப் புதியதல்ல.

அவள் அந்த வேலையில் சேர்வதற்கு முன் என்னிடம் கூறிச் சண்டை போட்டுக் கொண்டு தான் சேர்ந்தாள். அவள் சம்பாதித்துத் தான் காலந்தள்ள வேண்டும் என்ற நிர்ப்பந்தத்திலில்லை நாங்கள். கல்யாணமாகி ஐந்தாண்டுகளாயும் எங்களை இன்பத்தில் அழ்த்த ஒரு பிள்ளை இல்லையே! அந்தக் குறையே அவளைக் குற்றவாளியாக்கி வரம்பு மீறிப் பேசவும், ஆட்டிப் படைக்கவும் செய்கிறது.

அவள் வேலைக்குப் போவதாகச் சொன்னாள். நானும் மறுக்கவில்லை. ஆனால் அவள் தேர்ந்து எடுத்துக் கொண்ட தொழில்தான் எனக்குக் கசந்தது.

எங்களுக்குள் சண்டைகளும் சச்சரவுகளும் எவ்வளவோ முளைத்து அழிந்து விட்டன.

''உங்களுக்கு ஏன் வீண் சந்தேகங்கள்? ஆண்கள் பெண்களுக்கென்று தனித் தனியாக ஏதாவது வேலை இருக்கிறதா, என்ன? நீங்கள் பெண்களுடன் வேலை செய்வதில்லையா? அப்படியா மீறி நடந்து விடப் போகிறோம்? நம் மனந்தான் நமக்கு வேலி. 'மாடலிங்'காக இருப்பது மாபெரும் குற்றம் என்ற எண்ணத்தை முதலில் அழித்துக் கொள்ளுங்கள். நமக்கு இருக்கும் வேலைத் திறமையைச் சம்பளத்துக்காக மற்றவர்க்குப் பயன்படுத்துவது போல் இதுவும் சம்பளத்துக்குச் செய்யும் வேலைதானே. வேறென்ன இதில் இருக்கிறது'' என்று முகத்தில் அறைவது போல் கூறி விட்டாள்.

வேறென்ன நான் சொல்ல இருக்கிறது? விட்டுத் தள்ளு குப்பையை. காலுக்கு உதவாத செருப்பைக் கழற்றித்தான் எறிய வேண்டும்.

அவள் அந்த வேலையில் என்னை மீறிக் கொண்டு சேர்ந்தாள். அவள் அழகோடு அதிர்ஷ்டமும் இணைந்தது. முன்னேறினாள். அவள் புகழின் வளர்ச்சியில் எனக்குப் பொறாமையா? அவள் அழகு எனக்குச் சொந்தம் என்ற சுயநலமா? எது என்னை எரித்தது என்று எனக்குத் தெரியவில்லை. அது என் மனத்தில்



விதையாக விழுந்து வளர்ந்து காட்டுப் புதராகி விட்டது.

பத்திரிகையைப் படிக்காமல் மேஜைமேல் தூக்கி எறிந்து விட்டு எழுந்து விட்டேன்.

அன்று இரவு வீட்டுக்கு வந்ததும் ஒன்றுமே சாப்பிடாமல் மாடிக்குச் சென்று விட்டேன். தனிமையில் குமுறல். இவளுடன் நிம்மதியாக வாழ முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. இதற்கு ஒரு முடிவு கட்டியே ஆக வேண்டும். அவளைத் தீர்த்து விடப் போகிறேன். அழித்து விட்டுச் சுதந்திரப் பறவையாக வெளியேறி விடுவேன். யாருக்கும் தெரியாமல் திட்டமிட்டுச் செய்யப் போகிறேன். யாருக்குமே தெரியாது.

பாதி கட்டி முடித்திருந்த கட்டிடத்தில் வேலையில் மூழ்கி இருந்தேன். எனக்கு அங்கு தான் வேலை. சில இடங்களில் இன்னும் மேல் பூச்சுக்கூடப் பூசவில்லை. நான்காவது மாடியில் மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தேன்.

நான்காவது மாடியிலிருந்து ஐந்தாவது மாடிக்குப் போகப் படிக்கட்டு வேலை துவங்க வேண்டும். அதற்காக சென்டரிங் பலகைகளைச் சாய்வாகப் பொருத்தியிருந்தார்கள். வேலை நேரம் முடியப் போகும் தருணம். இருள் வேறு கவியத் தொடங்கியது. வேலையாள் ஒருவன் ஏதோ மேலே கொண்டு சேர்க்க வேண்டும் என்று அதன் மேல் ஏறப் போனான்.

அதற்குள் மேஸ்திரி ''ஏய் முண்டம், அதன் மேல் போய் ஏறுகிறாயே? இப்போது தானே அதைப் பொருத்தினோம். இன்னும் சரியாகக் கூட ஆணி அடிக்கவில்லை. அது தனித் தனியாகக் கழண்டு விடும். நீ பாதாள லோகத்தைப் பார்த்து விடுவாய். அட சீ! அப்படிப் போ!'' என்று விரட்டினான்.

அப்போதுதான் எட்டிப் பார்த்தேன். நிஜமாகவே கைப்பிடி இல்லாமல் கம்பிகள் நீட்டிக் கொண்டிருந்தன. வெறுமையான படிக்கட்டுகள் கீழே. போய்ச் சேரும் வேகத்தில் சதையாவது எலும்பில் ஒட்டியிருக்குமா என்பது சந்தேகம்தான். எதிரே இனிமேல் போட வேண்டிய கான்கிரீட்டுக்காக நாளுக்காகக் கோத்து வைக்கப் பட்டிருந்தன.

''நேரம் ஆகி விட்டது. மற்றது நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாமா ஸார்?'' என்றார் மேஸ்திரி.

''ஏன் நாளைக்கு என்ன?''

''நாளைக்கு லீவு ஸார்'' என்றான். மறுநாள் விடுமுறை என்பதே அப்போதுதான் என் நினைவுக்கு வந்தது. அப்போது தான் அந்த ஐடியாவும் எனக்கு வந்தது.

மறுநாள் விடுமுறை. மனத்துக்குள் ஆயிரம் திட்டங்கள்.

''பார்கவி... இன்று மாலை வெளியில் போகலாம் வா'' என்றேன். அவளுக்கே ஆச்சரியம். என்னை நோக்கினாள். நானே அவளை வெளியில் கூப்பிடுவது அபூர்வம்.

''இன்று கபாலீசுவரர் கோயிலுக்குப் போகலாம் என்றிருந்தேன், உங்களையும் அழைத்துக் கொண்டுதான்'' என்றாள்.

என் மனம் தொய்ந்தது. எப்போது இனி இந்த மாதிரி சந்தர்ப்பம் கிடைக்கும்?

''கபாலீசுவரர் கோயில் எங்கும் ஓடிப் போய் விடாது. அடுத்த வாரம் போய்க் கொள்ளலாம். நேற்றுக் கட்டிடத்தில் வேலை செய்து கொண்டிருக்கும் போது மேல் தளத்தில் நின்று கொண்டிருந்தேன். அந்த உயரத்திலிருந்து பார்த்தால் மெட்ராஸ் என்ன அழகாயிருக்கிறது தெரியுமா? நீ கூட லைட் ஹவுஸில் ஏறிப் பார்த்து எவ்வளவு நாளாகிறது என்று சொல்லவில்லை? வாயேன் பீச்சில் காற்றாட இருந்துவிட்டு அப்படியே இதையும் பார்த்து விட்டு வரலாம்'' என்றேன்.

''ஆகா! அதற்கென்ன'' என்று உற்சாகமாகக் கூறி விட்டாள். இது போல் ஜோடியாக சினிமா கடற்கரை என்று எவ்வளவு நாட்களுக்கு முன் கிளம்பி யிருப்போமோ?

பீச் மணலில் காலாற நடந்துவிட்டு சற்று நேரம் அமர்ந்து பேசினோம். ''கட்டடத்துக்குப் போய்ப் பார்த்துவிட்டுச் சீக்கிரம் போகலாம். வாருங்கள். வீட்டில் ஆயிரம் வேலை இருக்கிறது'' என்று நச்சரித்துக் கொண்டிருந்தாள்.

எனக்கு இருட்டும் நேரம்தானே வேண்டும். அதற்குத் தானே தாமதித்துக் கொண்டிருந்தேன்.

''கொஞ்சம் பொறு பார்கவி. சுகமான ஆறுமணி காற்றை அனுபவித்துவிட்டுப் பிறகு பார்க்கலாம். சமையல் வேலையெல்லாம் தூக்கிக் குப்பையிலே போடு. வீட்டில் மாமியாரா? நாத்தனாரா? யார் இருக்கிறார்கள், திட்டுவதற்கு. இரவு ஹோட்டலிலேயே சாப்பிட்டு விடுவோம்.'' கூசாமல் பொய் கூறினேன். இனிமேல் என்ன?

பிறகு அவளை அழைத்துக் கொண்டு கட்டடத்துக்குப் போனேன். காவலாளியைப் பற்றி நான் கொஞ்சமும் கவலை கொள்ளவில்லை. அவன் இரவுச் சாப்பாடு எடுத்து வரும் தன் பேரனை இருத்தி விட்டுக் குடிக்கப் போய் விடுவான் என்று எனக்குத் தெரியும். அவன் தொந்தரவு கொடுக்க மாட்டான்.

நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. அவளை அழைத்துக் கொண்டு மேலே ஏறினேன். நான்காவது மாடிக்கு வந்தவுடன் நின்று விட்டாள்.

''இதன் மேலெல்லாம் எப்படி ஏறுகிறது?'' என்று பலகைகளைச் சுட்டிக் காட்டினாள்.

''என்ன இது? இதெல்லாம் சிரமமா?'' அவளை அணைத்துக் கொண்டே மெதுவாகப் பலகைகளில் ஊன்றி ஏறினேன்.

''வேண்டாங்க. இன்னொரு நாள்...''

''அட சீ! சும்மா வா'' என்றேன். பயந்து விட்டாள். சிரித்துக் கொண்டே இன்னும் இறுக்கமாக அணைத்துக் கொண்டேன். அவள் என்மேல் சந்தேகப்படவில்லை. அந்த அணைப்பில் சுகமாகச் சாய்ந்து கொண்டாள். என் மனத்தில் ஒரு நெருடல்.

பலகைகள் அழுந்தி எழுந்தன. மெதுவாக அவளை இழுத்துக் கொண்டு மேல் மட்டத்தில் உட்காரப் போகும் போது பலகைகளில் ஒன்று இடம் பெயர்ந்து அசைந்தது. அந்த வேகத்தில் பயந்து மேலே எம்பினாள். பலகைகளை ஆட்டம் கண்டது. புடவை ஆணியிலே மாட்டிக் கொண்டு கிழிந்தது.

''ஐயோ! எப்படி இதில் மறுபடியும் இறங்கப் போகிறோம் இந்த இடத்துக்கு வந்திருக்கவே கூடாது'' என்று முணு முணுத்தான்.

''கவலைப்படாதே நானில்லை உனக்கு.''

அதேபோல் இன்னும் ஒரு பலகையையும் ஏறி விட்டால் தீர்ந்தது. மேலேயும் ஏறி விட்டோம். அப்பாடா! காங்கிரீட் தளத்தில் காலை வைத்து விட்டோம். பெரிய இடைகழி போல் மறு கோடிவரை தளம் சென்றது. நடந்து சென்றோம். அந்தக் கடைசியில் ஒரு படிக்கட்டு 'வாட்டர் டேங்'குக்குச் செல்வதற்காக இருக்கிறது என்று தெரியும்.

அதில் அவளை அழைத்துக் கொண்டு சென்றேன். திறந்த வெளி வந்து விட்டது. ஆகா! என்ன அருமையான காட்சி. என்ன அழகான காற்று. நானே என்னை மறந்து விட்டேன். அவளுக்குக் கேட்கவா வேண்டும்?

''ஆகா எவ்வளவு அழகாக இருக்கிறது. அதோ கபாலி கோபுரம் கூடத் தெரிகிறதே'' என்று கூறிக் கொண்டே விளிம்புக்கு ஓடினாள்.

''ஏய் அங்கே ஓடாதே. விழுந்து விடுவாய்!'' இதை நானா கூறினேன்? ஓடிவந்து என் கைகளைக் கோத்துக் கொண்டாள் அவள். நான் அவளை அழைத்துக் கொண்டு மையத்துக்குச் சென்றேன். அங்கே சிறிது வேலை பாக்கி இருந்ததினால் பாதியில் நிறுத்தி வைத்திருந்தார்கள்.

''அம்மாடி தலை சுற்றுகிறது.'' என்றாள். நான் ஒரு நிமிடம் மௌனமாக இருந்தேன். பிறகு அவசரமாகத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு படியை நோக்கி நெம்பித் தள்ளினேன். அவள் குரல் அலறலாய் வெளிப்பட்டது. மரப் பலகைகள் இடம் பெயர்ந்து சரிந்து விழும் ஓசை கேட்டது. நிச்சயம் போயிருப்பாள். நான் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. ஓசைகளெல்லாம் அடங்கி விட்டன.

பிறகு எழுந்து கோடியில் உள்ள படியை நோக்கி நகர்ந்தேன். படிக்கட்டு வழியாக இறங்கும்போதே சீக்கிரம் இந்த இடத்தை விட்டு ஓடித் தப்பித்துக் கொள்ள வேண்டும் என்ற வேகத்தில் தலை தெறிக்க ஓடினேன். வேகமாக இடைகழியில் ஓடிப் படிக்கட்டில் காலை வைக்... சட்டென்று பக்கத்திலுள்ள கம்பத்தைப் பிடித்துக் கொண்டேன். சென்டரிங் பலகைகள் இருந்த இடம் காலியாக இருந்தன. அவை கீழே அவள் உடலைப் போர்த்தியிருந்தன. வெற்றிடம் என்னைப் பார்த்துச் சிரித்தது. இதுதான் என் முடிவா?

---








✖ மயில்சாமி, தலைவர்
✖ கே.எஸ். வைத்தியநாதன், காரியதரிசி, கோவை ஸ்போர்ட்ஸ் சங்கம்

இரவு நேரத்தில் கிரிக்கெட் ஆடுவதைப் பார்த்திருக்கிறீர்களா?

ஆஸ்திரேலியாவில் உண்டு. பிரகாசமான மின் விளக்குகள் மைதானத்தை ஒளிமயமாக்க, ஆடுவார்கள்.

இந்தியாவில் முதல் முறையாக கோயமுத்தூரில் ஆடினார்கள். இம்முயற்சி மாபெரும் வெற்றி என ஆட்டக்காரர்கள், நிர்வாகிகள், ரசிகர்கள் ஆகிய அனைவரும் கூறுகின்றனர்.

பிப்ரவரி மாத இறுதியில் கோவை நேரு ஸ்டேடியத்தில் மாட்சுகள் நடந்தன. மாவட்டக் கலெக்டர் கே. எச். மொய்னுத்தீன் அளித்த ஒத்துழைப்பை அனைவரும் நன்றியோடு பாராட்டுகின்றனர்.

ஏழு கிரிக்கெட் குழுக்கள் பங்கு பற்றின. முப்பது ஓவர் அடிப்படையில் மாட்சுகள் நடந்தன. தினம் ஒரு மாட்ச் மாலை 6. 30க்கு ஆரம்பித்தது. மாட்ச் முடியும் வரை ஆட்டம் நீடித்தது.

பிரகாசமான மின் விளக்குகளின் ஒளியில் பசும்புல்தரை பார்க்க மிக அழகாக இருந்தது. அதில் மிக உயர்ந்ததும் வெண்மையானதுமான கிரிக்கெட் பந்து இங்குமங்கும் உருண்டோடியது புதுமையான கண்ணுக்கினிய அனுபவம்.

இந்த மாட்சுகளை நடத்திய கோவை ஸ்போர்ட்ஸ் சங்கம் 1975ல் ஆரம்பமாகியது. கிரிக்கெட் மட்டுமின்றி வேறுபல விளையாட்டுக்களையும் ஊக்குவிக்கிறது.

பிரபல ஆட்டக்காரர்கள் பலர் பங்கேற்ற இந்த மாட்சுகளில் இறுதி வெற்றி ஹைதராபாத் ஆந்திரா பாங்குக்குக் கிடைத்தது. லயன்ஸ் கிளப் வழங்கிய பரிசைப் பெற்றது. மாட்சுகளைத் தொழிலதிபர் ஜி. கே. சுந்தரம் தொடங்கி வைக்க, கோவை மாவட்ட கிரிக்கெட் சங்கத்தலைவர் கே. ஸ்ரீனிவாசன் பல்வேறு பரிசுகளையும் வழங்கினார்.

ரசிகர்களைப் பொறுத்த மட்டில் ஆபீஸ் வேலைக்கு இடைஞ்சல் இல்லாமல், வெந்து புழுங்காமல், இனிய குளிர்ந்த சூழலில் கிரிக்கெட் மாட்சுகளைப் பார்க்க முடிந்தது. புதுமையானதோர் அனுபவம்.

# நரிக்கொம்பு 13

மினி மர்மத் தொடர் கதை

**'கிருஷ்ணவேணி'**

மதன் எதிர்பார்த்த விருந்தாளி வேறு யாருமல்ல, நந்தினி தான்! ஹரிக்கு அவளை அங்கு பார்த்தது வியப்பாக இருந்தது. ஆனால் தன் வியப்பை வெளிப்படுத்திக் கொள்ளவில்லை, அவன்.

வனப்பு மிக்கவளாகத் தோன்றினாள் நந்தினி. மதனைக் கண்டதும் இதழ்களில் முறுவல் மலர்ந்தது.

''வாருங்கள் மிஸ் நந்தினி...'' என்று அவளது பட்டுக் கைகளைப் பற்றித் தன் கரங்களுக்குள் வைத்து மூடியபடி அழைத்து வந்தார் மதன். தலைநிமிர்ந்து கம்பீர நடையும் பார்வையும் கொண்ட நந்தினியிடம் ''என் மகள் அநீதா — என் காரியதரிசி லக்ஷ்மண் பிரசாத் — இது மிஸ்டர் ஹரி ஆர்க்கிடெக்ட்'' என்று அங்கிருந்தவர்களை அறிமுகம் செய்து வைத்தார் மதன்.

எல்லோரும் உணவருந்த மேஜை முன் அமர்ந்தார்கள். ஹரி அநீதாவுக்கும் நந்தினிக்கும் நடுவில் அமர்ந்து கொண்டான். மௌனத்தைக் கலைத்து நந்தினி பேசினாள்.

''பாட்டாளி வர்க்கத்திடம் மிஸ்டர் மதனுக்கு ரொம்பப் பரிவு என்று கேள்விப் பட்டேன்!'' என்றாள்.

''ஓ! மகிழ்ச்சி... மகிழ்ச்சி...! எந்தச் சந்தர்ப்பத்திலும் மிஸ் நந்தினிக்குத் தன் பணியிலேயே கருத்து... உழைக்கும் பத்திரிகையாளர் இல்லையா? விருந்துண்ண வந்திருக்கும் போதும் விஷயங்களைச் சேகரிக்கிறார்'' — என்றார் ஓசையின்றிச் சிரித்துக் கொண்டே மதன்.

நந்தினி கர்வத்தோடு ஹரியைப் பார்த்தாள் கீழ் நோக்காக.

'யூ லிட்டில் ஃபூல்!' என்று மனத்துக்குள் கடிந்து கொண்டான் நந்தினியை ஹரி. 'உன்னை ஏதோ ஒரு உள்நோக்கோடு இங்கு வரவழைத்திருக்கிறான் இந்த மதன். அவன் விரித்த வலைக்குள் விழுந்திருக்கிறாய் நீ. நல்லவேளை நானும் வந்தேனே...' வராமலிருந்தால் ...' என்று நினைத்துக் கொண்டான்.

அதன் பிறகு யாரும் பேசவில்லை. மௌனமாக உணவருந்தினார்கள். மதனின் நரிப் பார்வை தன் மீதும் நந்தினி மீதும் பதிந்திருப்பதை உணர்ந்தான் ஹரி.

''பெரிய கோடீஸ்வரரான நீங்கள் உழைப்பாளி வர்க்கத்துக்கு உதவுவதே என் குறிக்கோள் என்று கூறி இருக்கிறீர்கள் இல்லையா? ஆனால் தொழிற் சங்கங்களில் எனக்கு நம்பிக்கை இல்லை என்கிறீர்கள் — பேச்சுச் சுதந்திரம் எழுத்துச் சுதந்திரம் இவையெல்லாம் சமுதாயத்தைத் தவறான பாதைக்கு இட்டுச் செல்லும் என்றும் கூறுகிறீர்கள். ஒன்றுக்கொன்று முரணாக இருக்கின்றன. மக்களை வழி நடத்திச் செல்ல ஒரு தைரியசாலி — வலுவான தோர் தலைவன் வேண்டும் என்கிறீர்கள்...''

ஹரி நந்தினியைத் துளைப்பது போலப் பார்த்தான். மதனின் பார்வையும் லக்ஷ்மண் பிரசாத்தின் பார்வையும் மோதிக் கொண்டன. அநீதா ஒருத்திதான் பாதிக்கப்படாதவளாக அமர்ந்திருந்தாள்.

மதன் நந்தினியைப் பார்த்துக் கேட்டார். ''பிரார்த்தனை செய்யும் பூச்சியைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா?''

''இல்லை... அதென்ன பூச்சி?'' என்றாள் நந்தினி.

''நீங்கள் கேள்விப் பட்டதுண்டா?'' — ஹரியைப் பார்த்துக் கேட்டார் மதன்.

''பிரேயிங் மாண்டிஸ் என்பார்களே அது தானே?''

''ஆமாம் அதுவேதான்!'' என்றாள் அநீதா சர்வ சாதாரணமாக. ''தன் இனத்தைத் தானே கடித்து விருந்தாகச் சாப்பிடும் ஒரு வகைப் பூச்சி. தோற்றத்தில் பிரார்த்தனை செய்வது போன்று இருந்தாலும் தன் ஜோடியையே தன் இரு கைகளாலும் பற்றிக் கொண்டு கடித்து விழுங்கும் படுபயங்கரமான காரியத்தைச் செய்யுமாம் அந்தப் பூச்சி...''

''இவ்வளவு விளக்கமாக நீ கூறுவது எனக்கு வியப்பாக இருக்கிறது. ஏனென்றால்...'' என்றான் ஹரி.

''எதையும் காண முடியாத கண்ணற்றவளாயிற்றே நான் என்பதினால்தானே? என் சித்தப்பா என் கண்களாக இருப்பவர். அவர் கூறிய விளக்கம்தான் இது.''

''ஓ...!'' என்றவன் மதனைப் பார்த்துக் கேட்டான். ''பார்வைக்கு அபாயமற்றதாக அப்பாவியாகத் தோன்றினாலும் வஞ்சம் தீர்த்துக் கொள்ளுவதில் உள்ள வலிமையை விளக்குவதற்கான உதாரணமோ இந்தப் பூச்சி விஷயம்?''

அமைதியாக — அழுத்தமாகச் சிரித்தார் மதன். அடி வயிற்றில் ஆரம்பித்த அந்தச் சிரிப்பு அவர் உடலெங்கும் வியாபித்து முகத்தில் பரவி இதழ்களை விரியச் செய்தன. அது ஒருவகை கொடூரமான சிரிப்பு. மதன் கேட்டார்: ''நரிக் கொம்பு பற்றி உங்களுக்கும் நந்தினிக்கும் தெரியுமல்லவா?''

''எங்களுக்கு எதுவும் தெரியாது.'' என்றான் ஹரி. மதனின் கருநீலக் கண்களில் தீவிரம் படர்ந்தது. ''நரிக் கொம்பு என்பது ஒரு விலையுயர்ந்த பொருள். ஏராளமான விலையுயர்ந்த கற்கள் இழைக்கப் பட்டதோர் ஆபரணம் போன்றது.''

''அப்படியானால் மிகவும் மதிப்புடையதாக இருக்குமோ?''

''ஆமாம்... நரியின் நாக்கு சிவப்பு ரத்தினக் கற்கள், அதன் கண்களில் நீலம். இவை தவிர கோமேதகம், மரகதம், வைரங்கள்... எல்லாம் உண்டு. அதன் மதிப்பு வெறும் இந்தக் கற்களினால் மட்டுமல்ல. அது என் பரம்பரைக் குடும்பச் சொத்து. லெஜண்டு மென்டல் வால்யூ கொண்டது.''

'உன் ஸெண்டிமெண்ட், என் செருப்புக்குச் சமானம்' என்று எண்ணிக் கொண்டான் ஹரி. 'அந்தக் குடும்பச் சொத்தை எதற்காகத் தேடி அலைகிறாய் நீ?' என்றும் தனக்குள் கேட்டுக் கொண்டான்.

''அந்த நரிக்கொம்பின் மதிப்பும் மகிமையும் என் ஒருவனுக்குத்தான் தெரியும். மற்றவருக்கு — அதன் நாணய மதிப்பு என்னவானாலும் அதைப் போலப் பல மடங்கு கொடுத்து அதைப் பெற நான் தயங்க மாட்டேன்.''

நந்தினி கேட்டாள். ''நீங்கள் குறிப்பிடும் அந்தச் சின்னத்துக்கு எத்தனை பொருளானாலும் கொடுப்பீர்களா?''

''கொடுப்பேன்...!''

''அதை அடைவதற்காக...'' நிதானமாகக் கேட்டாள் நந்தினி. ''எதற்கும் தயாராக இருக்கிறீர்கள் இல்லையா மிஸ்டர் மதன்?''

மதனின் விழிகளில் வியப்புச் சுடர்விட்டு எரிந்தது.

''அதற்காக எதையும் செய்வேன். செலவிடுவேன்!..''

நந்தினியின் கோர்த்த கைகளின் முஷ்டி இறுகியது. ''அந்த நரிக்கொம்புக்காக நீங்கள் எவ்வளவு செலவிடவும் தயார். அப்படியானால் அதன் மதிப்பு என்ன?''

கணப்பைக் கிளறி விட்டால் தகதகப்பது போல மதனின் விழிகளில் ஜுவாலை வீசியது.

''அதற்கு ஈடாக இந்த உலகில் எதுவுமே கிடையாது. எதையும் அதற்காகத் தரத் தயாராக இருக்கிறேன் — அதாவது அதை என்னுடையதாக்கிக் கொள்ளுவதற்காக. அதற்குத் தடையாக எது இருந்தாலும் அதைத் தகர்த்தெறிந்து அதை எனதாக்கிக் கொண்டே தீருவேன்.''

''அதன் வழியில் யார் இருந்தாலும் கூட'' என்றாள் நிதானமாக நந்தினி. ஹரி சட்டென்று அவள் கைவிரல்களைப் பற்றி அழுத்தினான், மதனின் முக பாவத்தின் மாறுதலைப் பார்த்தபடியே. அவனுடைய அந்த அழுத்தம் அவளைப் பேசாதிருக்கும்படி எச்சரித்தது. சூழ்நிலையின் இறுக்கத்தைத் தளர்த்துவதற்காகத் தானே பேசினான் ஹரி. ''மிஸ்டர் மதன், நரிக்கொம்பைப் பற்றி நீங்கள் கூறிய தகவல்களெல்லாம் சுவாரசியமாக இருக்கின்றன. ஆனால் அதனால் எங்களுக்கு எவ்வித பலனும் கிடையாதே என்பதை நினைக்க வருத்தமாகவுமிருக்கிறது.''

''எவன் ஒருவன் தன்னுடைய அதிர்ஷ்டங்களை என்னுடன் பிணைத்துக் கொண்டு பகிர்ந்து கொள்ளுகிறானோ அவன் வாழ்க்கையில் பொருளாலும் புகழாலும் மிகமிக உயரத்துக்குப் போய் விடுவான்.'' — நிதானமாக ஒருவித அழுத்தத்தோடு கூறினார் மதன்.

ஹரி தன் பிடிக்குள் இருக்கும் நந்தினியின் கை நடுங்குவதை உணர்ந்தான். அவள் பார்வையைத் தீர்க்கமாக நோக்கினான் சில விநாடிகள். நந்தினி தன் பார்வையை அவனிலிருந்து விலக்கிக் கொண்டு தலை தாழ்த்தினாள். ஹரி, அவள் கையைப் பற்றியுள்ள தன் பிடியை மேலும் இறுக்கினான், பிறகு மதனுக்குப் பதில் கூறினான். ''இருக்கலாம். ஆனால் மிஸ்டர் மதன். எங்களுக்கும் அதற்கும் எவ்விதத்திலும் சம்பந்தமே இல்லை. ம்... அதுசரி, நரிக்கொம்பு என்று குறிப்பிட்டீர்களே — உயர்ந்த கற்களிழைத்த பொருள் — அது எப்படி இருக்கும் — எந்த அளவில்?''

மதன் தன் விரல்களைக் குவித்து ஓர் அமைப்பை உருவாக்கிக் காட்டினார்.

''உதாரணமாக... ஒரு டாய்லட் சோப்புக்குள் பதிக்கும் படியாக இருக்குமோ?'' என்று கேட்டான் ஹரி. அருகில் அமர்ந்திருந்த அநீதாவின் உடல் 'திடீரென்று அதிர்ந்தது — பரபரத்தது. அதே மாதிரி சட்டென்று அமைதியாகி அடங்கியது.

(தொடரும்)





உங்களது
கனவுகள்
நனவாகிட,
எண்ணற்ற ஆசைகள்
நிறைவேறிட,
ஒரு அரிய வாய்ப்பு!
எளிய வழி!

# இன்றே
# வாங்கிடுவீர்.
# தமிழ்நாடு தமிழ்ப் புத்தாண்டு
# சிறப்புக் குலுக்கல்
# பரிசுச் சீட்டை!

எல்லா வரிசைகளுக்கும்
பொதுவான சிறப்புப் பரிசுகள்:

**2 முதல் பரிசுகள்**
**ஒவ்வொன்றும் ரூ. 5 லட்சம்**
**3 இரண்டாவது பரிசுகள்**
**ஒவ்வொன்றும் ரூ. 1 லட்சம்**
மற்றும் ஏராளமான மனம் கவரும் பரிசுகள்.

மொத்த வரிசைகள்: 10
மொத்தப் பரிசுகள்: 13,075
மொத்தப் பரிசுத் தொகை:
ரூ. 41 லட்சம்
சீட்டின் விலையோ ரூ.1/-
பரிசுகளோ பல லட்சம்!
ஏராளமான பரிசுகள்!

குலுக்கல் நாள்: 20-4-1979







வெளியிட்டோர்:
இயக்குநர்,
தமிழ்நாடு பரிசுச்
சீட்டுத் திட்டம்,
சென்னை 600 002.

DIPR/43b/79-8/FDS




## 29. சதியாலோசனை

மாவீர ஹைதர் அலிகான் நவாப் பகதூரின் இரங்கல் மிக்க மறைவுச் செய்தி அதற்குள் ஹைதர் நகர் வரை எட்டி, அதற்கப்பாலும் இப்பாலுமாக நிறைந்திருந்த கோட்டைகளிலும் எதிரொலித்து, எத்தனையோ லட்சோப லட்சக் கண்களில் எத்தனையோ ஆயிரமாயிரம் உணர்ச்சிகளை விதவிதமாகவும், வித்தியாசமாகவும் பிரதிபலிக்கச் செய்து கொண்டிருக்கிறது...

ஆளுநர் அயாஸ்கானுக்கு இச்செய்தி சென்ற வாரத்திலேயே கிடைத்து விட்டது. ஆ! அதன்பிறகு அவன் செயல்படத் தொடங்கிய பயங்கரச் சதித் திட்டங்களின் பாதிப்புகள்தாம் ஸ்ரீரங்கப்பட்டினம் வரை நிம்மதியற்றுக் குழப்பத்தில் மூழ்கடித்தன. பெருமை மிக்க லால்மகாலே பேரவதிக்குட்பட்டு விட்டது.

அயாஸ்கான் தனது நீண்ட நாளைய திட்டம் — நெட்ட நெடிய கனவு — நினைவுகளுக்கு அப்பாற்பட்ட ஆசை — நன்றியின் மறுபக்கம் இப்போதுதான் தருணம் வாய்த்து வேலை செய்யத் தொடங்கியிருக்கிறது என்பதில் நிரம்பவும் குதூகலித்து, உடனடியாகக் கர்னல் வில்க்ஸ் துரையை வரவழைத்திருந்தான். அவனிடம் ஏற்கெனவே விவரித்திருந்த தனது பேராசை நிறைந்த திட்டங்களையும் ஒப்பந்தங்களையும் மீண்டும் ஞாபகப் படுத்துபவனே போல விவரித்தான். அனைத்தையும் தனது ராஜ தந்திரம் நிறைந்த செவி மடல்களை நன்றாகவே திறந்து நிரப்பிக் கொண்டான், அந்தக் கும்பினியின் ராணுவத் தளபதி கர்னல் வில்க்ஸ்.

கர்னல் வில்க்ஸூம் இந்தச் சமயம் கருதிய பெரு வாய்ப்பினை விவரித்துச் சென்னைச் சபை (Council ) க்கு நீண்ட கடிதம் எழுதி விரைந்து அனுப்பி வைத்திருந்தான். படைகள் கணக்க மில்லாமல் வந்துவிட வேண்டும் என்றும், இப்புகல்தான் ஸ்ரீரங்கப் பட்டினத்தை அடைவதற்குள் ஸ்ரீரங்கப் பட்டினத்துச் சின்ன சுல்தான் அப்துல் கரீமிடம் ஓர் ஒப்பந்த உடன்படிக்கை எழுதிக் கையொப்பம் வாங்கிவிட வேண்டும் என்றும் அச்செய்தியில் குறிப்பிட்டிருந்தான். அந்தக்

கையொப்பத்தை வைத்துக் கொண்டு அவன் நடத்தவிருக்கிற நாடகம், பல காட்சிகளைக் கொண்டதாக இருந்தது.

ஆனால் அதற்கப்பாலும் சில பல ரகசியங்கள் அந்தக் கடிதத்தில் மிகவும் நரித்தன்மை கலந்து எழுதப் பட்டிருந்ததைக் கேவலம் சுயாட்சிப் பேராசை கொண்ட நன்றியின் மறுபக்கமாக மாறிய அயாஸ் கானால் அறிய முடியவில்லை. கெடுவானுக்கு வாழ்வின் ஒரு பக்கம் தானே புரியும்? பாவம், அயாஸ்கான்! அவனது சந்தர்ப்பத்துக்கேற்ப, மாறும் நிலையுடைய ரத்தம், இவ்வளவு ஈனத்தனமாக — பேடிமை நிறைந்த சுயமையுடன் செயல்படுகிற போது, அவனது நாட்டின் அழிவுபற்றி, அவனுக்குப் புரிய நியாயமில்லை என்று அந்தக் கோட்டையில் ஒருசில விவரம் தெரிந்தவர்கள் வருந்திக் கொண்டனர்.

புகழ் வாய்ந்த ஹைதர் நகரின் அரண்மனைக் கூடம் சின்னஞ் சிறியதாக இருந்தாலும், பென்னம் பெரிய கலை நுணுக்கங்களுடன் அதனைச் சிரமைத்திருந்தார், ஹைதர் அலி. அவரது ஓய்வு காலத்துக்கென



அமைக்கப்பட்டதாயிற்றே? இப்போது அவரே நீண்ட ஓய்வெடுத்துக் கொண்டுவிட்டார்...

கர்னல் வில்க்ஸ், ஆசனமொன்றில் அமர்ந்து கனத்த சுருட்டைப் புகைத்துக் கொண்டிருந்தான். ஓ... அவனது நினைவுகள் அந்தக் கூடத்தே புகைந்து வட்டமிட்டுச் சுழித்துக் கொண்டிருந்தன. அந்தக் கூடத்துள் நுழைவோமா என்று அவன் எத்தனை நாட்களாகத் திட்டம் வகுத்துக் கொண்டிருந்தான்..

''கர்னல் துரை! எல்லாம் சரிவர முடியும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை! ஆனால், எப்படியும் திப்புசுல்தானை எனது பேடனூர் சிறையில் அடைத்துவிட்டால், பிறகு எந்தக் கவலையும் நம்மைத் தாக்கக் காரணமே இல்லை!''

இப்படியுமப்படியுமாக உலவிக் கொண்டிருந்த அயாஸ்கான், இவ்விதமாகத் தனக்குத் தெரிந்த அரைகுறை ஆங்கிலத்துடன் உருது மொழியைக் கலந்து கூறுகிற போது, அவனது முகத்தில் எந்தவித மெய்ப்பாடும் வெளிப்படவில்லை. ஒருநிமிடம் நின்று கர்னல் வில்க்ஸை நோக்குகிறான்...

அவனது உள்ளத்தில் திப்புசுல்தானைப் பற்றிய நீண்டநாள் வஞ்சகம் புகைந்து, நெருப்பாகிக் கனியும் தருணம் வாய்த்ததில் ஒரு அல்பமான சந்தோஷம். ஆனாலும் அதனை அவன் முகத்தில் காட்டிக் கொள்ளவில்லை.

கனமான சுருட்டை இருமுறை உருட்டி யுருட்டிப் பொறுக்க இழுத்துப் புகையைக் கக்கிய பிறகு அண்ணாந்து கவனித்தான் கர்னல் வில்க்ஸ்: ''என்ன சொன்னீர்கள்? திப்புசுல்தானை இந்தப் பேடனூர் சிறையில் அடைத்து வைப்பதாவது ? அதுவே ஒரு கவலைதானே? திப்புசுல்தான் பிடிபட்டதும் பஞ்ச பஞ்சாகத் துண்டுதுண்டாக வெட்டி, ஒவ்வொரு அங்கத்தையும் ஒவ்வொரு பகுதியில் புதைத்தால்தான் எல்லோருக்குமே ஒரு நிம்மதி!''

கர்னல் வில்க்ஸ் தனக்குத் தெரிந்த அரைகுறை உருது பாஷையுடன் ஆங்கிலத்தையும் குழைத்துச் சொல்கிற போது, அவனது நரிக் கண்கள் சுருட்டின் நெருப்புபோல் கனன்றிருந்தன.

அயாஸ்கான் முகத்தில் அதுவும் சரிதானே என்கிற கவர்ச்சி மெல்ல விரிகிறது. ''இப்படியும் நடந்து விட்டால் எல்லோருக்குமே நிம்மதிதான்!''

''அயாஸ்கான்! அப்துல் கரீமை நீங்கள் பரிபூரணமாக நம்புகிறீர்களா? திப்புசுல்தான் பரிசுத்தமானவீரன்! ஆதலால் சத்தியத்துக்குக் கட்டுப்படுவான்! அப்துல் கரீம் கோழைமை கலந்த வீரன்! அதனால் அவன் அசத்தியவான் என்பது மட்டுமல்ல, பச்சை அயோக்கியன்! அவனை எந்த அளவுக்கு நம்பி இருக்கிறீர்கள் என்பதுதான் எனக்குத் தெரிய வேண்டும்.''

''கர்னல் துரை! நீங்கள் எவ்வளவுக்கு அப்துல் கரீமை நம்பி இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கே நானும் நம்பி இருக்கிறேன். அதாவது, நீங்கள் நினைப்பதை நான் முழுதுமாக ஏற்கிறேன் என்பது இதன் பொருள்!''

''இது மழுப்பலான பேச்சு! உங்கள் மனத்திலிருக்கும் விஷயத்தைத் தெளிவாகவே பேசலாம்.''

''தெளிவாகச் சொல்ல வேண்டும் என்றால், நான் அப்துல் கரீமை நம்பவில்லை. எனது இந்தப் பேடனூரை எனக்குச் சுயாட்சியாக சாஸனம் வழங்கி விட்ட பிறகு, நீங்கள் ஸ்ரீரங்கப் பட்டினத்தையே விழுங்குவதானாலும் கவலைப்படமாட்டேன். ஆனால், எனக்கு வழங்கிய இந்தச் சுயாட்சி சாஸனம் எக்காரணம் முன்னிட்டும், பறிபோகக் கூடாது.''

''நல்லது; உங்கள் எண்ணத்தைப் பாராட்டுகிறேன்! நிச்சயம் உங்களுக்கு வழங்குகிற சாஸனம் பறிபோகக் காரணமே இல்லை.''

கர்னல் வில்க்ஸ், மிகவும் அர்த்தங்களடங்கிய பார்வையை அயாஸ்கான் மீது வீசி அளக்கிறான். அயாஸ்கான் அற்பமான மகிழ்ச்சியில் முறுவலிக்கிறான்.

''அடுத்து என்ன செய்வதாக உத்தேசம்? கர்னல் துரை?''

''சென்னைப் பட்டணத்திலிருந்து ராணுவங்களையும் அதற்கு முன்னால் செய்தியையும் எதிர்பார்க்கிறேன். எப்படியும் திப்பு சுல்தான் ஸ்ரீரங்கப் பட்டினம் அடைவதற்குள் செயல்கள் சுறு சுறு வென்று நடைபெற்று



# ஜப்பானில் ஆங்கிலம்

வியாபார அபிவிருத்திக்கு ஆங்கிலம் தெரிந்திருக்க வேண்டியது மிக அத்தியாவசியமாக இருக்கிறது. அயல் நாட்டுக் கம்பெனிகளுடன் தொடர்பு கொண்டிருக்கும் ஜப்பானியக் கம்பெனிகள் தங்கள் சிப்பந்திகள் ஆங்கிலம் கற்க வகுப்புகளை நடத்த ஏற்பாடு செய்துள்ளனர்.

திருமணத்தை எதிர் நோக்கும் ஜப்பானியப் பெண்களும் தேனீர் தயாரிப்பது மலர்களை அலங்காரமாக அமைப்பது முதலியவைகளுடன் ஆங்கிலமும் கற்பதில் முனைகின்றனர். ஜூனியர் பள்ளி, உயர்தரப் பள்ளி, பின் கல்லூரிகள். இவைகளில் ஆங்கிலம் கற்பது கட்டாயமானதாகும்.

ஒரு வியாபாரி ரயிலில் போகும்போது கூட ஆங்கிலச் சம்பாஷணை குறித்து ஒரு புஸ்தகத்தில் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருப்பதைக் காணலாம். ஆங்கிலப் பாடங்கள் கொண்ட டேப் ரிக்கார்டர்களையும் ஜப்பானியர் உபயோகிக்கின்றனர். டெலிவிஷனில் ஆங்கில போதனை ஜப்பானியர்களால் விரும்பிப் பார்க்கப் படுவதாகும்.

ஆங்கிலம் நன்கு பேசிப் பழகிக் கொள்ள விரும்பும் ஜப்பானிய மாணவர்கள் வெளிநாட்டினரை ஸ்டேஷன்கள், பார்க்குகள், ஸ்டோர்கள் முதலிய இடங்களில் சூழ்ந்து கொண்டு அவர்களுடன் பேசித் தங்கள் பாஷா ஞானத்தை அபிவிருத்தி செய்து கொள்கிறார்கள்.

—குகோபால்.

---

முடிந்து விட வேண்டுமே என்று நிமிஷத்துக்கு நிமிஷம் எதிர்பார்க்கிறேன்.''

''திப்புசுல்தான் வந்தால்தான் என்ன? ராணுவத்தை வைத்து ஒரு கை பார்த்து விட வேண்டியதுதானே?''

கர்னல் வில்க்ஸ் கடகடவென்று பெரு நகை புரிகிறான். பிறகு அந்தச் சிரிப்புக்கான காரணத்தை விளக்கினான்.

''நீங்கள் ஒரு கோட்டையின் தலைவன்! ராணுவத்தின் பரிபாலகனல்ல! எனவே ராணுவத் தந்திரம் அறிய மாட்டீர்கள். அவ்வாறு ராணுவத்தைக் கொண்டு, திப்பு சுல்தானைப் பதம் பார்க்க வேண்டும்; பதம் பார்க்க முடியும் என்றால் எப்போதோ செயல் பட்டிருக்கலாமே! அது முடியாதது. திப்பு சுல்தான் ஒரு மாபெரும் தேசியப் புரட்சித் தலைவன்! மக்களின் ஆதரவு பெற்ற திலகம்! அவன் இல்லாத போது ராஜதந்திரமாக ஸ்ரீரங்கப் பட்டினத்தைக் கைப்பற்றி விட்டால், பிறகு திப்புசுல்தான் வேறெங்காவது ஓடி ஒதுங்க நேரிடும். மெல்ல மெல்ல — அதுவும் மெல்ல மெல்லத்தான் — ஓடி விரட்டிப் பிடிக்க வேண்டும்! அவ்வளவு எளிதில் அவன் அகப்பட மாட்டான்! அவனது யதாஸ்தானமான — மூல கேந்திரமான ஸ்ரீரங்கப்பட்டினம் முதலில் பிடிபட வேண்டும். அவன் வந்து விட்டால் — அவனை நேரில் கண்ட பிறகு இன்றைக்கு நம்முடன் உடன் படும் — நம்மை எதிர்பார்க்கும் அப்துல் கரீமே மாறிவிட மாட்டான் என்பது என்ன நிச்சயம்? அவ்விதம் அவன் மாறி விட்டால் நமது முயற்சிகள் அத்தனையும் வீணாகிப் போய் விடும்! எங்களுக்குப் பயமில்லை, ஆனால் உங்களுக்கு மிஞ்சுவது பேராபத்து! புரிகிறதா?''

அயர்ந்து போனான் அயாஸ்கான்.

ஓ... இப்படியும் ஒரு பேராபத்திருக்கிறதா?

அவன் மிகவும் வேதனையுடன் தனது கழுத்தைத் தடவிப் பார்த்துக் கொள்கிறான்..

அவனது பயந்து போன பாவனைகளைக் கவனித்த கர்னல் வில்க்ஸ், ''அஞ்ச வேண்டாம் அயாஸ்கான்! எப்படியும் இந்த உள்நாட்டுக் குழப்பத்தைச் சாதகமாகக் கொண்டு நாம் நமது திட்டத்தைச் சரிவர நிறைவேற்றிவிடலாம். நமக்கு உறுதுணையாக இருக்கிற திவான் சாகிப் மீர்சாதிக், அங்கிருந்து எந்தக் கால கட்டத்தில் எப்படி செயல்படவேண்டுமோ அதனைக் கவனித்துக் கொள்வார்'' என்று தைரியமூட்டினான்.

''எனக்கும் இதில் ஒன்றைப் புரிந்து கொள்ள முடியவில்லை. திவான் சாகிப் மீர் சாதிக், எந்த எதிர்பார்ப்பை வைத்து இப்படித் துணை புரிகிறார்?''

''அதுதான் ராஜ தந்திரம்! ஹைதர் அலியின் ஆட்சியில் மீர்சாதிக் அனுபவித்த சுகங்களைக் கூட திப்புசுல்தான் ஆட்சியில் அடதுல் அனுபவிக்க முடியாது! எனவே அப்துல் கரீமுக்கு ஆசை காட்டி ஒரு பொம்மை மாதிரி அரியணையில் அமர்த்தி விட்டால், பிறகு, அனைத்தும் மீர் சாதிக் கையில் தானே? ஒரு ஹைதர் அலிக்கு எத்தனை கௌரவம் உண்டோ, அத்தனையும் மீர் சாதிக்கை வந்து சேருமல்லவா?''

தன்னிலும் திவான் சாகிப் மீர் சாதிக் அனுபவிக்கப் போகிற சொர்க்கத்தை ஒரு கணம் கற்பனை செய்து வீங்கி வெடித்துக் கொள்கிறான் அயாஸ்கான்! ;

தான் எப்படி ஹைதர் அலி உயிருடன் இருக்கிற வரைக்கும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டோமோ, அப்படியே இந்தத் திவான் சாகிப் மீர்சாதிக்கும் எண்ணியிருந்தானா? — அயாஸ்கான் இது குறித்துத் தீவிரமாகச் சிந்திப்பதைக் கண்ட கர்னல் வில்க்ஸ், ''என்ன அயாஸ்கான் யோசனை?'' என்றான்.

''நாம் எப்போது படைகளுடன் புறப்படுவது? என்றுதான் யோசிக்கிறேன். அப்துல் கரீம் கணத்துக்குக் கணம் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பான்.''

''கையிலிருக்கிற சேனைகள் போதுமா?''

''ஆனாலும் இருப்பதைக் கொண்டு உதவலாம் அல்லவா?''

''திப்பு எங்கிருக்கிறான் என்கிற செய்திக்காகவே நான் காத்துக் கொண்டிருக்கிறேன்.

அத்துடன் சென்னைப் பட்டினத்து ராணுவ பலத்தையும் எதிர்பார்க்கிறேன். இன்னும்..''

கர்னல் வில்க்ஸ் முழுமையாகச் சொல்லி முடிக்கு முன்பு, அவனது அந்தரங்கப் பணியாளன் ஓடோடி வந்து வணங்கி நின்று ''மாட்சிமை பொருந்திய கர்னல் துரை! திப்பு சுல்தான் கோலாரில், ஹைதர் சடலத்தைப் புதைத்து விட்டுப் படைகளுடன் கிளம்பிவிட்டான் என்று செய்தி கிடைத்திருக்கிறது. உடையார் ராஜ வமிசத்தவரிடமிருந்து வேறு கடிதம் வந்திருக்கிறது. ஸ்ரீரங்கப்பட்டினத்தில் உள்நாட்டுக் குழப்பம் அதிகரித்து விட்டதாம்! மக்கள் அப்துல் கரீமுக்கு எதிராகக் கோஷமிட்டுக் கிளம்பி விட்டார்களாம்! இதற்குக் காரணம், பெரிய சுல்தானு பேகம் பக்ருன்னிஸா! அந்தம்மாள், ஜனானாவிலிருந்து கொண்டு தக்க பாதுகாவலுடன் உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருக்கிறார்களாம்! எந்த நேரத்திலும் அவர்கள் திப்புசுல்தானை எதிர்பார்க்கிறார்கள். அப்துல் கரீம் தனக்குரிய ராணுவங்களை வைத்துக் கொண்டு உள் நாட்டுக் குழப்பத்தையடக்க முயன்று கொண்டிருக்கிறாராம்! எப்படியும் நமது உதவி உடனடியாகத் தேவை என்று அவசரக் கடிதம் அனுப்பி இருக்கிறார்!'' என்று துடிதுடிப்புடன் கூறி முடித்ததும், அசையாத கர்னல் வில்க்ஸின் பீரங்கி நெஞ்சம் கூட, அசைந்து ஆட்டம் கொடுத்தது. அந்தரங்கப் பணியாளன் கூறிய துடிப்பு மிக்கச் செய்தியில், ஆங்கில மொழியின் பிரமாதமான பதப் பிரயோகத்தின் காரணமாகச் சிலது புரிந்தும் பலது புரியாததுமாக விழிக்கலானான் அயாஸ்கான்.

''ஆல்ரைட்! நீ போகலாம்!'' என்று கூறித் தனது அந்தரங்கப் பணியாளன் சென்று மறைகிற வரை பேசாது இருந்த கர்னல் வில்க்ஸ், அதுவரையிலும் நிரம்பவும் எதிர்பார்ப்புடன் செய்தியை அறிகிற துடிப்புடன் காணப்பட்ட அயாஸ்கானை நோக்கி, விவரத்தை விளக்கினான். செய்தியை முழுக்கவுமாக அறிந்த அயாஸ்கான், பல விநாடிகள் வரை பேதலித்துப் போனான். பேராபத்து தனக்கு நிகழ்ந்து விடுமோ என்கிற அச்சம் கணத்துக்குக் கணம் மேலோங்கி நின்றது.

''வில்க்ஸ் துரை! தயவு செய்து இப்போது உடனடி நடவடிக்கைகளை எடுத்தாக வேண்டும். உங்கள் அபரிமித மான ராஜதந்திரம் பயனளிக்க வேண்டும்'' என்று கூறுகிற போது, அயாஸ்கான், தனது பயத்தைச் சொற்களில் தேக்கியிருந்தது குரல் நடுக்கத்திலிருந்து தெரிய வந்தது.

மீண்டும் ஒரு சுருட்டை எடுத்துப் பற்ற வைத்தான் கர்னல் வில்க்ஸ். அவனது மூளை புகைந்தது. எழுந்து ஒருமுறை குறுக்கும் நெடுக்குமாக உலவினான்.

''அயாஸ்கான்! நமது சிறைக் கூடத்தில் எத்தனை கைதிகள் இருக்கிறார்கள்?''

ஏன் இவன் இதனைக் கேட்கிறான்?

அது குறித்து விளக்கம் கேட்க இது சமயமில்லை என்றுணர்ந்த அயாஸ்கான், ''சுமார் ஐயாயிரம் பேர் இருக்கிறார்கள்'' என்றான்.

''இவர்களில் போர்க் களத்தில் சிறைப் பிடித்தவர்கள் எத்தனை பேர்?''



நள்ளிரவு. நல்ல குளிர். ஆற்றுப் பாலத்தின் மீதேறிக் கீழே குதித்துத் தற்கொலை செய்து கொள்ள முயன்ற அவனைப் போலீஸ்காரர் பிடித்துக்கொண்டார். ''அடப் பாவி மனுஷா! உனக்கு ஏனப்பா இந்தப் புத்தி! இந்தக் கடுங் குளிர்லே தண்ணியிலே குதிச்சா உன்னைக் காப்பாத்த நானும் குதிக்கவேண்டி வரும். அப்புறம் ரெண்டு பேருக்கும் நிமோனியா வந்து விறைக்கச் செத்துப் போயிடுவோம். அதனாலே நல்ல பிள்ளையாட்டமா வீட்டுக்குத் திரும்பிப்போ. வேணும்னா யாருக்கும் தெரியாமத் தூக்குப் போட்டுக்கப் போ!''

— ''நிமல்''

---

''நூறு அல்லது இருநூறு பேர்களை நீக்கி அனைவருமே போர்க்களத்தில் சிறைப் பிடிக்கப் பட்டவர்கள்!''

''அனைவருமே எங்கள் ராணுவத்தவர்கள் இல்லையா?''

''ஆமாம்.''

''அனைவரையுமே விடுதலை செய்யுங்கள். அனைவரையும் ராணுவத்துடன் இணைத்து அழைத்துச் செல்கிறோம். அனைவருக்குமே நமது வெற்றிக்குப் பிறகு பரிசுப் பணங்களுடன் மரியாதை நடக்கும் என்று உத்தரவிடுங்கள்!''

''இதில்...''

''இதைப் பற்றிய பேச்சைப் பிறகு வைத்துக் கொள்ளலாம். அடுத்து காவேரியை நெருங்கிக் கொண்டிருக்கிறது! உடனடியாக ஆணையிடுங்கள்!''

மறு பேச்சின்றி அந்தக் கூடத்தை விட்டு வெளியே சென்றான் அயாஸ்கான். மூக்கின் அடிப்பாகத்தை இடக்கரத்து ஆள் காட்டி விரலால் தேய்த்துக் கொண்டே யோசிக்கிறான் கர்னல் வில்க்ஸ். பிறகு சுருட்டை வாயில் வைத்து உருட்டியுருட்டிப் புகைக்கிறான். மிகப்பெரிய கும்பினி ராணுவத் தளபதியான அவனது சிந்தனை திப்புசுல்தான் என்கிற அந்த ராஜகர்ஜனையை எப்படி அடக்குவது என்பது பற்றியதில் சுழல்கிறது...

ராஜகர்ஜனை அவ்வளவு எளிதில் அடங்கி விடுமா? அடக்கி விடத்தான் முடியுமா?

(தொடரும்)

கவனமாய்ப் பார்த்துக்
கொள்ள அம்மா நீங்கள்
இருப்பதனால்...



**பல்லு முளைக்கும்
பாப்பாவுக்கு
எதுவானாலும்
வாய்க்குள்ளே !**

அதனால் கவலை வேண்டாம். பெரும்பாலான குழந்தைகளுக்கும், 6 முதல் 15 மாதங்களுள் நிகழ்வதுதான் இது. (உங்கள் டாக்டரிடம் கேட்டுப் பாருங்கள்) அவனைத் தடுக்காதீர்கள். கூரான பொருளால் தன்னைக் காயப்படுத்திக் கொள்ளாமலும், ஏதாவது பொம்மைத் துணுக்கு தொண்டையில் சிக்கிக் கொள்ளாமலும் மட்டும் கவனித்துக் கொள்ளுங்கள்

தின்பதற்குக் கொடுங்கள் ஒன்று—முழு நலம் ஆனதும், சுவைமிக்கதும், ஊட்டமளிப்பதும் ஆன ஒன்று...

**உங்கள் கவனத்தை ஒத்த அன்பான கவனத்தோடு செய்தது ஒன்று.**

அவனுக்குக் கொடுங்கள் ஒரு பார்லே க்ளூகோ பிஸ்கட்.

எங்கள் ஆலைக்கு வாருங்கள், பாருங்கள், பார்லே க்ளூகோ பிறப்பதை!

'முழுநலமானது' என்றால் என்ன என்று தெரிந்து கொள்ளுங்கள். எங்கள் ஆலை நவீனமானதொரு மருத்துவமனை போன்றது. அங்கு, எல்லாம் தாமே இயங்குவன; மிகவும் சுத்தமானவை; கைபடா தூய்மையோடு பிஸ்கட்டுகள் உங்களுக்குக் கிடைக்கின்றன.

பால், சர்க்கரை, க்ளூகோஸ் மற்றும் சன்னமாக அரைத்த கோதுமை முதலிய குழந்தைக்கு உகந்த ஊட்டங்கள் செறிந்த பார்லே க்ளூகோ பிஸ்கட் உங்கள் குழந்தைக்கு ஆதர்சமானது

தவிரவும் சுவைமிக்கது இது: கரகரப்பானது: செரிப்பதற்கு எளியதுமென்று தின்று ரசித்து மகிழ்வான் உங்கள் குழந்தை.

# உங்களின் அன்புக் கவனம் உங்கள் குழந்தையிடம்— எங்களுக்கும் அதே கவனம் பார்லே க்ளூகோ தயாரிப்பதில்.




**பார்லே க்ளூகோ** பிஸ்கட்டுகள்.

உலகத் தேர்வில் 5 முறை வெற்றி உங்கள் வியாபாரியிடம் வண்ணமய 'பாப்பா' படமுள்ள உறையைப் பார்த்து வாங்குங்கள்.

everest/858/PP/tm

# கனவா-நிஜமா? 13

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்
















தங்கள் திறமையைக் காட்ட இன்னும் யாராவது வருகிறீர்களா?


சண்டனும் முண்டனும் தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டார்கள்
ஆள் பலே வீரனாக இருப்பான் போலிருக்கே...
உண்மைதான். நல்ல பலசாலி, முரடனாகவும் காணப்படுகிறான். ஆனால் நாகரீகமில்லாத காட்டான்—முட்டாளாகவுமிருப்பான் போலிருக்கிறது. இவனைத் தகுந்தபடி பயன் படுத்திக் கொண்டால் நாம் பலனடையலாம்


...நிமித்திகனின் வாக்கு நிறைவேறிவிட்டது. இந்தக் காட்டானைச் சிங்காதனத்தில் பொம்மை மன்னனாக உட்கார வைத்து மாயாபுரியின் ஆட்சியை நாம் நடத்துவோம்...என்ன சொல்லுகிறாய்?


மன்னர் வஜ்ரபாகு இவனுக்குத் தனி மணி முடியைத் தர மறுப்பாரானால்..
நாம் எதற்காக இருக்கிறோம்? தேவ வாக்கும் பலித்துவிட்டது அதைத் தலைவணங்கி ஏற்க மறுக்கிறார் என்று மக்களிடம் பிரசாரம் செய்வோம். புரட்சி செய்யத் தூண்டுவோம். மன்னர் மணிமுடியைப் பறிப்போம்—இந்தப் பிச்சாண்டியிடம் கொடுப்போம். இவன் பெயருக்கு ராஜா—நாம் நிஜமான ராஜாதிராஜா! எப்படி என் திட்டம்?
தொடரும்

# பலாட்டம்

ரொடேரியன் ராஜகோபாலன்

மார்கழி மாதத்துக் காலைக் குளிர்! சிந்தாமணி, அண்ணு சதுக்கம் எதிரில் —

பெரம்பலூரிலிருந்து திருச்சி வந்து சேர்ந்த பஸ் நின்றது. திமுதிமுவென்று ஏழெட்டு பேர் போட்டி போட்டுக் கொண்டு ஏணியைப் பெயர்த்து விடுவதுபோல் மேலே ஏறினார்கள்.

பால் கேன்கள் இறக்கப்படுவதைக் கவனமாகப் பார்த்த வண்ணம் கீழே நின்று கொண்டிருந்தாள் சிந்தாமணி. மேலே குளிருக்காக இறுக்கமாகப் போர்த்திக் கொண்டிருந்த அங்கோலாவுக்கும் மீறிய இளமை.

''டேய் மாரி... எசனே பால் கேன் வந்திருக்கா...''

இல்லையென்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டி விட்டுக் கீழே இறங்கிக் கொண்டிருந்தான் அவன்.

திருச்சியில் சிந்தாமணி சுறுசுறுப்பான பகுதி. சுமார் நூற்றுக்கு மேற்பட்ட கும்பல் பால் வியாபாரத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. மாலை நேரத்தை விடக் காலை நேரத்தில் கும்பல் அதிகம். அத்தனையும் பால் வியாபாரிகள்.



பல மார்க்கங்களிலிருந்து திருச்சி வரும் எல்லா பஸ்களிலும் பால் கேன்கள் வந்து இறங்கும். காட்சி — மிக அரிய காட்சி!

பெருக்கெடுத்தோடும் காவேரிக் கரையருகில் உண்மையில் பாலாறு ஓடுவதுபோல் எவ்வளவு பால் கேன்கள்!... சமயத்தில் இரண்டும் ஒன்றுகக் கலப்பதும் உண்டு... அதுவேறு விஷயம்!

அத்தனை பால் வியாபாரிகளுக்கு மத்தியில் — ஒரே ஒருத்தியாய் - தன்னந்தனியாய்-தனிராய்ச் சுடர் விட்டுப் பிரகாசித்து வியாபாரம் செய்து வந்தாள் சிந்தாமணி.

கோடாலிக் கொண்டை, மெருகேறின உடம்பு, கறுப்பானுலும் வசீகரம்! எல்லோரிடமும் கலகலப்பாக — ஆனுல் கண்டிப்பாகப் பழகும் சுபாவம். அவளுடைய பழக்கத்தால் எல்லா வியாபாரிகளும் ஆத்திரப் படுமளவுக்கு — அவளுடைய வியாபாரம் களை கட்டிக் கொண்டிருந்தது. பலர் தங்கள் வியாபாரத்தைக் கடை கட்டுமளவுக்கும் போய் விட்டது. குறிப்பாகச் சென்னியப்பனுக்கு.

பல ஊர்களிலிருந்து வந்து கொண்டிருந்த பால் கேன்கள் அவனை விட்டுக் கைமாறின. தட்டுப்பாடு நேரத்தில் கைகொடுத்து உதவிய பலர் வரவு செலவை நிறுத்தினர். அவையெல்லாம் கரையில் ஒதுங்குவதுபோல் — சிந்தாமணிபக்கம் போய்ச் சேர்ந்தது.

சோர்ந்து போனவன் சமயத்தை எதிர் பார்த்தான், கொட்டிக் கவிழ்க்க!

நேரடியாகப் பல ஊர்களுக்குச் சென்று அவளது வாடிக்கையைக் கெடுக்கும் முயற்சியில் இறங்கினுன். மாட்டுக்குக் கொடுக்கிற அட்வான்ஸை அதிகப்படுத்துவது — லிட்டருக்கு ஐந்து பைசா அதிகமாகக் கொடுத்து வாங்குவது—இப்படிச் சில சில்லறைப் பிரச்னைகளைக் கிளப்பிவிட்டுத் 'தண்ணி' காட்டினுன்.

சிந்தாமணி சளைக்கவில்லை. கருமமே கண் அவளுக்கு. வாடிக்கைகாரர்

களைப் பார்த்துக் கலகலவென்று சிரித்து ''என்னு... சொகந்தானுங்களா'' என்று கேட்டால் போதும்!—

''நாளைக்கு வண்டியிலிருந்து கேன் இறக் கிக்கோ'' என்று சொல்லி விடுவார்கள்.

கழி மாட்டுக்கு மட்டும்தானு? சிந்தாமணி தலைச் சுழி எல்லோரையும் சொக்க வைக் கிறதே... என்ன செய்ய?

சின்னுன் ஓடிவந்தான். ''யக்கா... எசனை லேந்து பால்கேன் வந்திருக்கு... ஆனு சென்னியப்பன் ஊத்தி அளந்துக்கிட்டிருக் காரு...'' என்ருன்.

சிந்தாமணி சிந்தனை வசப்பட்டாள். அவ ளுக்கே ஒன்றும் புரியவில்லை. நெருப்பு வளை யத்துக்குள் நின்று கொண்டிருப்பது அவ ளுக்குத் தெரியும். இருந்தாலும் தொழிலில் விட்டுக் கொடுக்க முடியுமா?

''நானே போய்க் கேட்டுட்டு வர்றேனே..'' என்ற சிந்தாமணி சென்னியப்பனை நெருங் கினுள். மும்முரமாகப் பால் அளந்து கொண் டிருந்தான்.

''எசனை பெருமாள் கோனுர் பால்கேன் வந்திச்சா...''

மிரண்ட மாடு முறைப்பது போல் ஒரு பார்வை பார்த்தான் சென்னியப்பன்.

''ஏம்மா...எசனையிலிருந்து பால் உனக்குத் தான் வருமோ?... மினுக்குக்கு மயங்கற ஆள் அவரில்லே... எனக்குத்தான் கேன் அனுப்பியிருக்காரு...'' என்ருன் லெண்டலும் கேலியுமாக.

''இந்தா பார் சென்னியப்பா... நானும் பார்த்துக்கிட்டுத்தான் வர்றேன்.. கொஞ்ச நாளாவே நீ நடந்துக்கறது சரியில்லே.... உன் பாட் டைப் பார்த்து நடந்துக்க.'' சிந்தாமணி ஆவேசம் வந்த வள் போல் பேசி முடித் தாள். சின்னுன் அவளுக்குப் பின்னுல் விரைப்பாக நின்று கொண்டிருந்தான்.

''இந்தாம்மா மிரட்ற வேலையெல்லாம் இங்கே வேண்டாம்... ஒழுங்கா, மரியாதையா, உன் பொழைப்பை நீ பார்த் துக்க... அப்புறம் 'சண்டி





மாடு' கணக்கா ஆயிடும்... ஜாக்கிரதை...''

''டேய் ... நீ சண்டி மாடில்லேடா... நொண்டி மாடு...ஒழுங்காகப் பிழைக் கிற வழியைப் பார்டா...'' என்ற சின்னுன், உறுமிப் பாய்ந்தான்.

''யாரைப் பார்த்துடா, டேய்ங்கறே? பொறுக்கி...'' என்ற சென்னியப்பன் பாய்ந்து ஒரு அறை கொடுக்க, பதிலுக்குச் சின்னுன் அடிக்க — இரண்டுபேரும் கட்டிப் புரண்டனர் கண் இமைக்கும் நேரத்தில் —

எல்லாப் பால் கேன்களும் உருண்டு பாலாறே ஓட ஆரம்பித்து விட்டது.

பெரும் கூட்டம் கூடிவிட்டது. விழுந்து புரண்டதில் சென்னியப்பனும், சின்னுனும் உருமாறிப் போயிருந்தார்கள். கொஞ்ச நேரத் தில் போலீஸ் வந்து இருவரையும் அழைத்துப் போனுர்கள்.

சிந்தாமணி செய்வதறியாமல் திகைத்துப் போனுள்!

**கா**வேரிக் கரை நிழலில் உட்கார்ந்திருந்த சென்னியப்பனின் மனம், சிந்தனையை அசை போட்டது.

என்ன தைரியம் இருந்தால் இந்தச் சண் டைக்கு ஒரு முடிவு கட்ட என் வீட்டுக்கு வருவா? கொஞ்சமாவது படபடப்பு, பயம் உண்டா? உள்ளே நுழைஞ்சு என்னமா கேள்வி கேட்டா?... சிந்தாமணியைப் போலவும் ஒரு பிறவி இருக்குமா?

பால்காரக் கும்பலில் எத்தினி பயலுக அவளைப் 'பட்டிமாடா' அடைச்சுடனும்னு திட்டம் போட்டானுங்க? பொம்பளே சிரிச்சா போச்சும்பாங்க... அவ சிரிக்கிறதெ 'வித்தி யாசமா' நினைச்சு எத்தினி பயல்கள் வாங்கிக் கட்டிக்கிட்டானுக?...

ஏன்... நானே ஆசைப்பட்டு எவ்வளவு அசிங்கப்பட்டேன்.!

''பால் வியாபாரம் செய்தா மட்டும் போதுமா? மனசும் அதுபோல இருந் தாத்தான் முன்னேற முடி யும்... தெரிஞ்சுக்க'' என் ருளே — கண்ரென்று!

''அனுவசியமா கேஸ் லேன்னு போவாதே... ஏதோ நீயும் அடிச்சே.. அவ

ணும் அடிச்சான்... நட்டத்திலே ஆளுக்குப் பாதியா போயிடுவோம்... நீ உன் பாட்டைப் பாரு... இதுக்கு ஒரு முடிவு கட்டத்தான் உன் வீடு தேடி வந்தேன்... என்ன சொல்றே...''

''நியாயம் பேச இங்கே ஏன் வந்தே... கோர்ட்டிலே பேசிக்கலாம்... சம்மன் வரும்.. வந்ததும் தெரியும்... இடத்தைக் காலி பண்ணு... இல்லே வீடு கசாப்புக் கடையாயிடும்...''

இது நடந்து ஒரு வாரத்துக்கு மேலாகி விட்டது!

சிந்தாமணி வட்டாரத்துப் பால் வியாபாரிகளுக்கே ஒரு பிரச்னையாயிட்டா! ஒரு முடிவு கட்டினாத்தான் வேலே ஓடும்...

''அண்ணே... வெளியூருக்கு அனுப்ப வேண்டிய கேனுங்க பூரா சுத்தமாக் கழுவிட்டேன்... நேரமாச்சு... வண்டி வந்துடும்... போகலாமா...'' என்ற ஆளின் குரல் நினைவுக்கு வந்து சென்னியப்பன் எழுந்து நடந்தான்.

நெஞ்சில் கனன்று கொண்டிருந்த திட்டத்தால் கண்கள் உருண்டு சிவந்தன.!






மார்க்கெட் போய் வந்தேன்;
மனைவியிடம் சொல்லிவைத்தேன்;
ஆப்பிள் சாம்பார் வை!
ஆப்பிள் ரசம் வை!
ஆப்பிள் பச்சடி வை!
வேறென்ன செய்வது?
தக்காளி கிலோ ஆறுரூபாய்,
ஆப்பிள் கிலோ ரெண்டுரூபாய்.
கதையல்ல; கற்பனையல்ல;
நாட்டு நிலவரம்தான்;
டிஸம்பரில் டெல்லி.

''என். எம். மணி.''

தேவரைப்போல் முரட்டு உடம்பும், மீசையுமாய், நின்று கொண்டிருந்தான் கல்லுக்குழி கோவிந்தன்.

''இந்தா கோவிந்தா... சொன்னபடி காரியத்தை முடிச்சுடு... உன் மேலே நம்பிக்கை வச்சுதான் — ஒரு வாரமா புரியாமக் குழம்பிக்கிட்டிருந்த நாங்க — இந்த முடிவுக்கு வந்திருக்கோம்... மத்தபடி நாங்க ஒண்ணும் அதிகமாச் சொல்ல வேணும்... எல்லாம் உனக்குத் தெரியும்...'' என்ற சென்னியப்பன் ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை அவனிடம் நீட்டினான்.

நோட்டை வாங்கிக் கொண்ட கல்லுக்குழி தனக்கே உரித்தான பாணியில் கனைத்துக் கொண்டு சென்றான்:

என்றைக்குமில்லாத பனிமூட்டம்! தலையோடு போர்த்தி யிருந்த மப்ளரை ஒதுக்கி விட்டு, பீடியைப் பற்ற வைத்த சென்னியப்பன் டீக்கடையின் முன்பக்கத்து பெஞ்சில் அமர்ந்தான். ஏதோ ஒரு பரபரப்பு நடக்கப் போவதை அறிந்த அவன் மனம் உள்ளுக்குள் துடித்துக் கொண்டிருந்தது.

அன்று சிலேயிலிருந்து அவனுடைய ஆள் தலைதெறிக்க ஓடி வருவது தெரிந்து, விசுக்கென்று எழுந்தான் சென்னியப்பன்.

''அண்ணே... மோசம் போச்சு... மோசம் போச்சு... வாங்கண்ணே வேகமா...'' என்றான் பரபரப்போடு.

''என்னடா... என்ன ஆச்சு?''...

''வயன்லேயிருந்து வந்த பால் பூராவும் சொடையும் தண்ணியுமா... முறிஞ்சு போயிருக்குண்ணே... இருபது கேனையும் இறக்கி ஓரமா அடுக்கியிருக்கேன்... இப்ப வாடிக்கைக்கு எப்படிப் பால் ஊத்தப் போறே...''

குளிர்ந்த உடம்பு சூடேறியது சென்னியப்பனுக்கு. ஓடினான்.

படபடப்போடு ஒவ்வொரு கேனைத் திறந்து பார்த்து மூடிக் கொண்டிருந்தான். இதற்குள் விஷயம் வெளியில் பரவி விட்டது.

அவனுக்கு வந்த பால் மட்டும் முறிந்து போயிருப்பானேன்! யாரோ வேண்டுமென்ற செய்த வேலே! சற்று நேரத்தில் —

சிந்தாமணி ஓடி வந்தாள். அவளைப் பார்த்ததும் உடம்பே ஆடியது.

..''இதென்ன அதிசயமா இருக்கு? கண்ணு போட்ட மாதிரி அம்புட்டுமா கெட்டுப் போயிடும்... வாடிக்கைக்கு வேணு... நான் பால் ஊத்தறேன்... எப்படியோ சமாளிச்சுடலாம்...'' என்ற சிந்தாமணி அவனைக் கவலையோடு நோக்கினாள். அடுத்தபடி —

குமுறிக் கொண்டிருந்த ஆத்திரத்தில், என்ன செய்கிறோமென்ற நிலைமறந்து — ''இன்டலா செய்யறே... உன்னை யார் வாடிக்கைக்குப் பால் கேட்டது...'' என்றவன் பக்கத்திலிருந்த பால் மூடியை எடுத்து எறிந்தான்.

சற்றும் எதிர்பாராத தாக்குதலுக்கு ஆளான சிந்தாமணி, தலையில் சிந்திய ரத்தத்துடன் கீழே சாய்ந்தாள்!

இரண்டு நாட்களாகத் தேடப்பட்டு வந்த கல்லுக்குழி கோவிந்தன் சென்னியப்பனை வந்து சந்தித்தான்,

# வளமான வாழ்விற்கு கல்வியே வழிகாட்டி!

SUSAK/LVB/514/79.

குழந்தைகளின் ஒளிமயமான எதிர்காலத்திற்கு சிறந்த கல்வியை அளிப்பது உங்கள் கடமை. உயர் பட்டப் படிப்பு, கைத்தொழில், தொழிற்கல்வி—எக்கல்வியில் ஈடுபட்டாலும் அவற்றின் தேவைக்கு சேமிக்க வேண்டும். அவர்களது வளமான வருங்காலத்திற்கு உறுதுணையான கல்வியை அளிக்க இப்பொழுதே சேமிக்கத் தொடங்குவீர்.

அருகாமையிலுள்ள எங்கள் வங்கியின் கிளைக்கு இன்றே விஜயம் செய்யுங்கள். எங்களது மானேஜர் சிறப்பான வாழ்க்கைக்கு ஏற்ற சேமிப்புத் திட்டத்தை தேர்ந்தெடுக்க வழிகாட்டுவார்.

## கல்விக்கு சேமிக்க வழிகாட்டும் உறுதுணைவன்




## லக்ஷ்மி விலாஸ் பேங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : கரூர்-639 001
நிர்வாக அலுவலகம் : சென்னை-600 086.

# குறைந்த தேவைத் திட்டங்கள்

நம் ஆந்திரப் பிரதேசத்திள்ள ஏழை எளிய மக்களின் நல்வாழ்வுக்கான முன்னேற்றத் திட்டங்களை குறிப்பிட்ட கால கட்டத்திற்குள் முடிக்க வேண்டுமென்ற குறிக்கோளுடன் செயல்படுவதில் 'M N P' Minimum Needs Programme என்ற இந்த அமைப்பு அதிக அக்கரை காட்டுகிறது.

கிராமப்புரங்களுக்கு மின் இணைப்பு, சாலைகள், குடிநீர் வசதி, ஆரம்பக் கல்வி, பிரைமரி வைத்திய நிலையங்கள் குடிசைவாழ் மக்கள் முன்னேற்றம் ஆகியவை இத்திட்டத்தின் தலையாய அம்சங்களாகும்.

ஆந்திர மாகாணத்தின் குறைந்த தேவைத் திட்ட அமைப்பின் பணிக்கு தேவையான 50.50 கோடி ரூபாயில் ஐந்தாவது திட்ட காலத்தில் ஆகியுள்ள செலவு 43.49 கோடிகளாகும்.

D.G. I & P.R. 40/78-79

''டேய் கோவிந்தா நன்றி கெட்டவனே... பணத்தையும் வாங்கிக்கிட்டுத் துரோகம் செய்துட்டியே... நீ உருப்படுவியா... விருப்பா சம்பிரதாயம் பேசினியேடா... இப்ப என்னடா சொல்றே...'' சென்னியப்பன் ஆத்திரம் பொங்கத் திட்டிமுடித்தான்.

''அண்ணே... எல்லார் கிட்டேயும் காட்ற படபடப்பை என் கிட்டேயும் காட்டாதே... நடந்த விஷயத்தைப் பொறுமையாக் கேட்டு— பிறகு ஒரு முடிவுக்கு வா... இந்தா புடி நீ கொடுத்த பணத்தை...'' என்ற கோவிந்தன், வியப்போடு பார்த்த சென்னியப்பனைப் பார்த்து மீண்டும் தொடர்ந்தான்:

''நீ சொன்ன திட்டப்படி, வெளியூர் பஸ்ஸுக்கு அனுப்பறதுக்குச் சுத்தமாக் கழுவி வச்ச பால் கேன்லே, நீ என்னிடத்தில் ஒப்படைச்ச சொட்டு மருந்தை ஊத்தறதுக்கு —சிந்தாமணி வீட்டுக்குப் போனேன்... ஆனா, அங்கே என்ன பேச்சு நடந்திச்சி தெரியுமா..''

''அம்மோய்... இந்தா பாரு... அனாவசியமா நீ கவலைப் படாதே... நான் கல்யாணம் செய்துக்கணும்னு —அதுக்கும் ஒரு முடிவு வைச்சிருக்கேன். கேஸ் விஷயமா வக்கீலய்யாகிட்டே போனப்ப கூட கல்யாண விஷயமா பேச்சு வந்திச்சு...

''பால் வியாபாரத்தைத் தொடர்ந்து நான் செய்யணும்னா, கல்யாணம் செய்துக்கறது தான் நல்லதாப்படுது... அப்படிச் செய்துக்கறதுன்னா — சென்னியப்பனைத்தான் கட்டிக்குவேன்!...''

''அடிப்பாவி... என்னடி சொல்றே... வம்பு வளர்த்து, உன் உயிரையே குடிக்கப் பார்த்தான். அந்தப் பொறாமைப் புடிச்ச பயலையா கட்டிக்கப் போறே... உனக்கு என்னடி பயித்தியமா புடிச்சிருக்கு...''

''அவருக்கு என் மேலே என்ன பொறாமை?... நல்லாத் தொழில் செய்யறேன்னு பொறாமை... நானே அவருக்குச் சொந்தமாயிட்டா... இன்னும் நல்லாச் செய்யலாமே... இது வரைக்கும் நானும் எப்படியோ என்னைக் காப்பாத்திக்கிட்டு வந்துட்டேன்... இனிமே முடியாது போலிருக்கு... பல பேருக்கு இரையாகி வீணாப் போறதைவிட, சென்னியப்பனைக் கட்டிக்கிறதே மேல்... பிறகு எல்லா எதிர்ப்பும் அடங்கிடும்... எனக்கும் அவரை மனப்பூர்வமாப் பிடிச்சிருக்கு... சீக்கிரமா நானே அவர்கிட்டே போய் ஒரு முடிவு கட்டப் போறேன்...''

''எனக்கு இதிலே துளிக் கூட இஷ்டம் இல்லே... பொறவு உன் இஷ்டம்...'' என்றாள் அம்மாக்காரி.

''வக்கீலய்யா கூட இந்த முடிவை நல்ல முடிவுன்னு சொன்னாரு... அவரும் இதுக்குத் தகுந்த ஏற்பாட்டைச் செய்யறதா சொல்லியிருக்காரு. அதனாலே தான் அவர் கொடுத்த கேஸுக்கு எதிர் வழக்காடாமே — குத்தத்தை ஒத்துக்கச் சொல்லப் போறேன்...''

சிந்தாமணி வீட்டில் நடந்த கதையை வரி விடாமல் சொன்ன கல்லுக்குழி கோவிந்தன் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

சென்னியப்பன் சிலையாய் உட்கார்ந்திருந்தான்.

''பால் போல மனசு உள்ள பொண்ணுக்கு எப்படிப்பட்ட துரோகத்தைச் செய்யப் போறோமேன்னு தவிச்சேன். மனசு துணியலே... ஆனா — அந்த நஷ்டம் உனக்கு ஏற்பட்டா எப்படித் துடிப்பேன்னு நினைச்சுப் பார்க்க ஆசை — சத்தமில்லாம உன் வீட்டுக்கு வந்து, சொட்டு மருந்தை எல்லா கேன்லேயும் ஊத்திட்டுப் போயிட்டேன்... பால் கெட்டுப் போனதுக்குக் காரணம் சிந்தாமணியோட தூண்டுதலோன்னு நினைச்சு — தீர விசாரிக்காம வழக்கம் போல ஆத்திரப்பட்டு அவ மண்டையை உடைச்சிட்டே...''

கல்லுக்குழி சட்டென்று பேச்சை நிறுத்தினான்.

தூரத்தில், தலையில் கட்டுடன் சிந்தாமணி தன்னை நோக்கி வருவதைப் பார்த்த சென்னியப்பன் தலை தாழ்ந்தது... கண்ணீர் முத்துக்கள் கீழே இறங்கின.

துருவங்களின் சந்திப்புக்குக் கல்லுக்குழி கோவிந்தன் தடையாய் இருக்க விரும்பாதது போல் மெதுவாக அங்கிருந்து நகர்ந்தான்!

## இவர்களில் அதிக முட்டாள் யார்?

ஒரு கம்பெனியில் இருக்கும் மானேஜர், அவரது இரு செயலாளர்கள் மூவரும் முட்டாளாக இருப்பதில் போட்டி போடுபவர்கள்.

ஒருநாள் அவர் தமது இரு செயலாளர்களையும் கூப்பிட்டு ''என் வீட்டுக்கும் போன் செய்து நான் அங்கே இருக்கிறேனா என்று விசாரியுங்கள்'' என்றார். மற்ற செயலாளரிடம் ரூபாய் பத்து கொடுத்து ஒரு அம்பாஸிடர் கார் ஒன்று வாங்கி வரச்சொன்னார்.

இதைக் கேட்ட இரு செயலாளர்களும் மேனேஜரின் முட்டாள்தனத்தை இப்படி விமரிசனம் செய்தார்கள்.

முதல்வர்: அவர் மேஜை மேலேயே டெலிபோன் இருக்கிறதே அவரே



போன் செய்து ''அவர்'' தனது வீட்டிலிதானே இருக்கிறாரா இல்லையா' என்று விசாரித்துத் தெரிந்து கொள்ளக் கூடாதா?

இரண்டாவது செயலாளர்: உன் கேள்வது பரவாயில்லே. பத்து ரூபாய் கொடுத்து அம்பாஸிடர் கார் வாங்கி வரச் சொல்கிறாரே. அவருக்கு மூளை இருக்கிறதா? இன்று ஞாயிற்றுக்கிழமை ஆயிற்றே கடை விடுமுறைநாள் ஆயிற்றே கார் வாங்கிவரச் சொல்கிறோமே என்று யோசித்தாரா?''

இவர்களில் ''அடி முட்டாள் '' யார்? —புராணச் சொற்பொழிவில் சுவாமி ஹரிதாஸ் கிரி கூறியது.

கேட்டுச் சிரித்தவர்: ''சங்கரி புத்திரன்.'

# மனம் கவர்ந்த மலேஷியா-7

சிவசங்கரி



மலேஷிய நாட்டின் பத்திரிகைகள் எழுத்தாளர்கள் பற்றிப் பேச்சு வந்த போது நான் ஒரு கேள்வி கேட்டேன்.

''கடந்த சில நாட்களாகச் சந்தித்த எழுத்தாளர்களில் சிலர் 'உங்கள் நாட்டில் நீங்களெல்லாம் எழுத்தை வியாபாரமாக்குகிறீர்கள். இங்கு நாங்கள் அப்படி இல்லை. ஆத்ம திருப்திக்காக மட்டுமே எழுதுகிறோம். பணத்துக்காக கண்டிப்பாக அல்ல' என்று குற்றம் சாட்டினார்கள். இதைப் பற்றி உங்கள் கருத்து என்ன?'' —

குமணன் சிரித்தார். பின் ''மலேஷியாவில் எந்த ஒரு பத்திரிகையும் — அரசாங்க வெளியீடான உதயத்தைத் தவிர, எழுத்தாளர்களுக்குச் சன்மானம் ஏதும் கொடுப்பதில்லை என்ற விஷயம் உங்களுக்குத் தெரியுமா? நாங்கள் கொடுப்பதில்லை, அதனால் அவர்கள் வாங்குவதில்லை. 'பணத்துக்காக இல்லை, ஆத்ம திருப்திக்கு' என்று மார் தட்டும் எழுத்தாளர்கள், நாங்கள் பணம் கொடுத்து வாங்க மறுத்தால், அதை ஆத்மதிருப்தி எனலாம் — ஆனால் அது சந்தேகத்துக்குரிய விஷயம் அல்லவா? இப்படி அனாவசியமாய்த் தமிழக எழுத்தாளர்களைச் சீண்டுவது எனக்குப் பிடிக்கவில்லை. இந்த ஆண்டிலிருந்து மலேஷியாவில் முதல் முறையாக வானம்பாடி தன்னால் இயன்ற அளவு சன்மானத்தை எழுத்தாளர்களுக்கு அளிக்கப் போகிறது - செய்யும் வேலைக்கு ஊதியம் பெறுவதில் என்ன தவறு?'' என்ற போது அவரின் வெளிப்படையான பேச்சு எங்களுக்கு ரொம்பப் பிடித்தது.



மலேஷியப் பத்திரிகைகளைப் பற்றியே பேச்சு உழன்றுகொண்டிருந்ததால் நான் என் மனசில் தோன்றிய மற்றொரு சந்தேகத்தை வெளியிட்டேன்.

''இங்கு வெளியாகும் ஆங்கில, தமிழ் ஏடுகளில், வானம்பாடி உள்பட, முதல் பக்க சேதிகள் அநேகமாய் கொலை, கொள்ளை, செக்ஸ் இவைகள் சம்பந்தப்பட்டதாகவே இருக்கின்றனவே இது ஏன்?''

கணவனைக் கொன்ற மனைவி, மனைவி ரூபத்தில் வந்த பிசாசு, நூதன நிர்வாணக் கொள்ளை—இப்படி அந்தநாட்டில் நான் படித்த முதல் பக்க செய்திகளின் பட்டியலை நீட்டிக் கொண்டே போகலாம்.

'ஆமாம் — இவை என்ன பெரிய சூடான, சுவையான செய்திகள்? நம் நாட்டில் மட்டும் இத்தகைய நியூஸ் வருவதில்லையா?' எனலாம். வரும்தான்: இங்கும் சகஜம்தான் — என்றாலும் குறிப்பிட்ட சில தினசரிகளே இம்மாதிரியான செய்திகளுக்கு முதல் பக்க முக்கியத்தைக் கொடுக்கின்றன. பெரும்பாலான தினசரிகள், முக்கியமாய் ஆங்கில நாளேடுகள் அரசியலுக்கும், நாட்டின் பிரச்னைகளுக்கும் முதல் பக்கத்தை ஒதுக்கிவிட்டு, உள்ளே வேண்டுமானால், சின்னதாய், கொலை, கொள்ளை செக்ஸ் சேதிகளை வெளியிடுகின்றன. கண்டிப்பாய் அங்கு நான் கண்ட மாதிரி நம் நாட்டில் இல்லை என்பதால் நான் குமணனிடம் இதைப் பற்றி விசாரித்தேன்.

''நீங்கள் கேட்பது சரிதான். இங்கு முதல் பக்கத்தில் பரபரப்பான செய்திகளைத்தான் எல்லாருமே வெளியிடுகிறார்கள். ஏன்? நாங்கள் கூட வானம்பாடியைத் தொடங்கும் புதிதில் நாட்டு நடவடிக்கைகளைச் சாதாரணமாய் வெளியிட்டுக் கொண்டிருந்தோம். விற்பனை ஐயாயிரத்தைத் தாண்டவில்லை. மக்களின் ரஸனைக்கு ஏற்பச் செய்திகளைக் கொடுத்தால் என்ன என்று தோன்ற 'கொலை'



✖ புகழ் மிக்க டோரியன் பழம்.

✖ பினாங்கில் அழகிய கோயில்.

✖ பினாங்கின் தென் தோலா கடற்கரையில்.

கொள்ளை, பயங்கர அதிசய செக்ஸ்' முதலியவைகளை முதல் பக்க செய்திகளாக்கிறேம். இன்று வானம்பாடி மூப்பத்தி எட்டாயிரம் பிரதிகள் விற்பனையாகி நாட்டின் முன்னணிப் பத்திரிகையாகி விட்டது. மேலை நாடுகளில் கூடச் சாதாரணமாய்ப் பரபரப்பான செய்திகளையே முதல் பக்கத்தில் பல பத்திரிகைகள் வெளியிடுகின்றன. இங்கும் அந்த சர்ப்பு உள்ளது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்...''

பினாங்கு நோக்கி எங்கள் கார் சென் ு கொண்டிருந்தது.

பே சி் கொண்டே காரை ஓட்டின குமணன் தொலைவில் போலீஸ்காரர்கள் நிற்பதைக் கண்டு வேகத்தைக் குறைத்தார். அவர்கள் 'நிறுத்து' என்று கை காட்டவும் அந்த இடத்திலேயே பட்டென்று ப்ரேக் போட்டு வண்டியை நிறுத்தினர்.

சாலையில் நின்றிருந்த இரண்டு போலீஸ்காரர்கள் கைகளிலும் சுடத் தயாராய் இயந்திரத் துப்பாக்கிகள் இருந்தன.

துரைராஜூம், குமணனும் வண்டிவிட்டு இறங்கி வெளியே நின்று கொண்டனர். டிக்கியைத் திறந்து காண்பித்தனர், மலாய் மொழியில் என்னமோ பேசினர்.

கார் நின்ற இடத்தில் ஒரு குப்பைத் தொட்டி இருந்தது. பயணத்தின் போது தாகமாய் இருந்ததால் குடிக்க என நாங்கள் வாங்கி வந்திருந்த கோக்கோ கோலா தீர்ந்து விடவே, காலி டின்களை எறிய எண்ணிய என் கணவர் கதவைத் திறந்து இரண்டு டின்களை 'டொம்' என்ற சப்தத்தோடு தொட்டிக்குள் வீசினர்.

பேசிக் கொண்டிருந்த போலீஸ்காரர்கள் சடாரென்று திரும்பினர். ஒருவர் குப்பைத் தொட்டியை நோக்கிப் பாய, இன்னொருவர் என் கணவரைச் சுடக் குறி பார்த்தார். ஒரு விநாடிதான். தூக்கி எறியப்பட்டது காலி கோலா டின் என்று தெளிவாக மலாய் மொழியில் காரமாய்த் திட்டிவிட்டு நாங்கள் புறப்பட அனுமதி கொடுத்தார்கள்.

கார் கிளம்பிய பின்னரும், துரைராஜ், குமணன் முகங்கள் சாதாரணமாக இல்லை.

''என்ன ஸார் இப்படிப் பண்ணி விட்டீர்கள்?'' என்றார் துரைராஜ்.

''என்ன செய்தேன்?'' விழித்தார் என் கணவர்.

''காலி டின்னை எறிய நல்ல இடம் பார்த்தீர்கள் சந்திரா ஸார் — கை குண்டைத்தான் வீசுகிறீர்கள் என்று போலீஸ் ஒரு விநாடி நினைத்து விட்டார்கள். ஏன், என்ன என்று விசாரிக்காமல் சுட்டுத்தள்ள இந்நாட்டுப் போலீசுக்கு அதிகாரம் உண்டு. கம்யூனிஸ்டுகளைப் பற்றின பயம் அதிகம் என்பதால் இத்தகைய கெடுபிடி. இப்போது கூட ஏதாவது ரகசிய சேதி கிடைத்திருக்கும் — பயங்கரவாதிகளைத் தேடித்தான் நம்மை நிறுத்தினார்கள். நாமெல்லாம் பிழைத்தது பூர்வ ஜென்ம புண்ணியம்...''

''உண்மையாகவா?'' நான் வியந்தேன்.

''இதில் என்ன விளையாட்டு! போன வாரம் என்ன நடந்தது தெரியுமா? காதலர் இருவர் கடற்கரைக்குக் காரில் போயிருக்கிறார்கள். இருட்டில் காரை நிறுத்தி விட்டுச் சல்லாபித்துக் கொண்டிருந்தவர்களை ரோந்து போலீஸ் பார்த்து விட்டு 'யார்?' என்று அதட்டி இருக்கிறார்கள். இவர்கள் தங்கள் நடவடிக்கை வெளியாகி விடுமே என்ற பயத்தில் காரைக் கிளப்பி இருக்கிறார்கள். போலீஸ் விடுமா? சுட்டுத் தீர்த்ததில் இரண்டு பேரும் அங்கேயே அவுட்... ஐயோ... இங்கு போலீஸ் நிற்கச் சொன்னால் நின்றுவிட வேண்டும். இல்லாவிட்டால் வம்பு...''

மலேஷிய அரசாங்கம் இரண்டுவிதக் குற்றவாளிகளை மிகவும் கடுமையாகத் தண்டிப்பதை நாங்கள் அங்கு இருந்த சில நாட்களிலேயே நன்கு புரிந்து கொள்ள முடிந்தது.

ஒன்று கம்யூனிஸ்டுகள்.

இரண்டு போதை மருந்துகளைக் கடத்தி அந்நாட்டுக்குள் கொண்டு வருபவர்.

இவ்விரு வகைக் குற்றவாளிகள் பிடிபட்டால் நிச்சயம் தயை தாட்சண்யம் இல்லாமல் மரண தண்டனை விதிக்கப்படுகிறது.

போதை மருந்து வைத்திருப்பவர்கள், உபயோகிப்பவர்களுக்குக் கூட தண்டனை கடுமைதான்.

அன்று மாலை ஏழு ம ரிக்கு எங்களுக்குப் பினாங்கில் செந்தமிழ்க் கலா நிலையத்

தில் வரவேற்பு இருந்ததால் குமணன் காரை விமானம் என்று மனசில் எண்ணிக் கொண்டு எண்பது மைல் வேகத்தில் பறக்க விட்டார்.

சாலைகள் ரொம்ப அகலமாய் இல்லாவிட்டாலும், விதிமுறைகளை ஒவ்வொரு கார் ஓட்டியும் செம்மையாய்க் கடைப்பிடிப்பதால் காரின் வேகத்தைக் குறைக்காமல் ஓட்ட முடிகிறது. நம் ஊர் மாதிரி ஆடு, மாடு மனுஷர்கள் அங்கே சாலைக்கு உரிமை கொண்டாடிக் குறுக்கும் நெடுக்கும் போகாதது இன்னொரு பெரிய விஷயம்!

பயணத்தில் துரைராஜும் குமணனும் பேசிக் கொண்டது பல சமயங்களில் எங்களுக்கு வேடிக்கையாய் இருந்தது.

''அந்த காடியை வெட்டிக் கொண்டு போங்கள்'' —

''வரிசையாய் லோரிக்காரர்கள் போகிறார்கள். இப்ப வெட்ட முடியாது — அந்தப் பக்கம் அல்லூர்... பார்த்துப் போங்கள்'' இப்படி ஏதாவது பேசுவார்கள். வரிசையாய் லாரிகள் போகின்றன, சாக்கடை இருக்கிறது அதனால் ஓவர்டேக் பண்ணுவது சிரமம் என்பதே அவர்கள் பேசியவை.

குமணன் எத்தனையோ திறமையாய் ஓட்டியும் எங்களைத் துரத்திக் கொண்டு கூடவே வந்த அடை மழையின் காரணமாய்ப் பினாங்கை அடைய ரொம்ப நேரம்தான் ஆகிவிட்டது.

ஆறு மணிக்குள் பினாங் போய் விடுவோம் என்று சொல்லி இருந்ததால் விழாவுக்குப் போகுமுன் ஹோட்டலில் முகம் கழுவி உடை மாற்றிக் கொள்ளலாம் என்று இருந்தேன். ஆனால் நீட்டிய திட்டம் ஒன்று, நடந்தது ஒன்று.

பினாங் ஒரு சின்னத் தீவு. பட்டர் வோர்த் என்ற இடத்தை அடைந்து, அங்கிருந்து ஃபெரி மூலம் பினாங்கை அடைய வேண்டும்.

ஆறுமணிக்குப் பினாங்கில் இருக்க வேண்டிய நாங்கள் ஃபெர்ரியில் காரை ஏற்றும் போது மணி எட்டரை, அதாவது ஏற்கனவே கூட்டத்துக்கு ஒருமணி நேரம் லேட் — இதனால் பெர்ரியிலிருந்து இறங்கிய உடன் நேரே கூட்டத்துக்குப் போக வேண்டும் என்ற தீர்மானத்தால் பாதிக்கப்பட்டது நான்தான்.

பிரதான விருந்தாளி, கலைந்த கேசமும், அழுது வடிந்த முகமுமாய்ப் போய் நின்றால் சிரிக்க மாட்டார்களா?

ஃபெர்ரி கடலைக் கடக்க எடுக்கும் நேரம் பதினைந்து நிமிஷங்கள். இதற்குள் நான் தயாராகி விட்டால்?

காருள் அமர்ந்தபடியே தலையை வாரிக் கொண்டேன். முகத்தை டவலால் துடைத்துச் சீர் செய்து கொண்டேன்.

என்ன பண்ணி என்ன?

ஏழரைக்குப் போக வேண்டிய கூட்டத்துக்கு ஒன்பதரைக்குத்தான் போய்ச் சேர்ந்தோம். நகரின் பிரமுகர்கள் பலர் இரண்டு மணி நேரமாய் எங்களைச் சந்திப்பதற்காகக் காத்திருந்ததை உணர்ந்தபோது எங்கள் மனம் ரொம்பவும் கஷ்டப்பட்டுத்தான் போயிற்று.

(தொடரும்)



# கிழக்கும் மேற்கும் படவிமரிசனம்

சந்திக்க முடியாத இரு திசைகளான கிழக்கையும் மேற்கையும் சந்திக்க வைத்து வெற்றி கண்டிருக்கிறார்கள். தூயவனின் வசனங்களுடன் பட்டாபி ராமன் டைரக்ஷனில் உருவாகியுள்ள இந்தப் படத்தைப் பல விதங்களில் பாராட்ட வேண்டும். முஸ்லீம் இளைஞன் அப்துல்லாவாக் வரும் மக்கள் கலைஞரின் திறமை முழுதும் இப்படத்தில் சுடர் விடுகிறது. இவ்வளவு அமரிக்கையாகவும் அழகாகவும், பாத்திரத்தோடு ஒன்றியும் ஜெய் வேறு எந்தப் படத்திலுமே தோன்றியதில்லை. வேஷப் பொருத்தம் பலே, நடிப்போ பலே, பலே!

இந்துப் பெண் லக்ஷ்மியாக வரும் படாபட், தான் 'ஜெய்'க்கு ஒன்றும் சோடையில்லை என்பதை நிரூபித்துக் காட்டியுள்ளார்.

டிம்பிளின் சகோதரி சிம்பிள் கபாடியா அப்துல்லாவின் காதலி ஜமீலாவாகத்தோன்றி கிளுகிளுப்பூட்டுகிறார். குரல் கொடுத்தவரின் குரலுக்கு ஏற்ப உதட்டசைவும் நடிப்பும் நன்கு பொருந்தியுள்ளன. முஸ்லீம் சமுதாய நடைமுறைகளை, பண்புகளை ரொம்ப ஜாக்கிரதையாகக் கையாண்டிருக்கிறார்கள். காதலனைத் தனித்துக் காண வரும் நேரத்திலும் ஜமீலா தன் பர்தாவை நளினமாக மூடித் திறந்து முகம் — காட்டுவது மனத்துக்கு உவப்பாக இருக்கிறது. இப்படிப் பிற மதத்திடம் கத்திமுனை போலப் பழகும் திரை உலகு பிராமண குலத்திடம் மட்டும்...? மனோரமா குருக்கள் மனைவியாக வருகிறார். ஐ. எஸ். ஆர். ஐயர் கணக்கப் பிள்ளையாக வருகிறார். நல்லவேளை ரசம் விரசமாகாதபடி கொண்டு போயிருக்கிறார்கள்.

மத ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் விதமான காட்சிகள் — அப்துல் அல்லாவை அழைத்துப் பாடுவதும் லக்ஷ்மி முருகனை வேண்டிக் கதறுவதும் இன்னும் பல காட்சிகளும் மன நிறைவைத் தருகின்றன. லக்ஷ்மியைத் தன் சகோதரியாக ஏற்றுக் கொண்ட அப்துல், தன் அளப்பரிய பாசத்தை வெளிப்படுத்தும் பல சந்தர்ப்பங்களும் சூழ்நிலைகளும் கதைக்குக் களை கட்டுகிறது.

வில்லன் இஸ்மாயிலாக வருகிறார் சுதர்ஸன். தமிழ்த் திரையுலகுக்கு ஒரு புதிய வில்லனை அறிமுகப் படுத்தி இருக்கிறார்கள். ஜமீலா தந்தையாக அசோகனும் லக்ஷ்மியின் காதலனாக ஸ்ரீகாந்தும் கச்சிதமாக நடித்திருக்கிறார்கள்.

கருணிராஜனின் புலி வேஷம்தான் கொஞ்சம் திருஷ்டி பரிகாரம். ஆனாலும் சோகம், பாசம், தவிப்பு, வேதனை ஆகிய ரசங்களுக்கு இடையே கொஞ்சம் சிரிக்க உதவுகிறது.

ஜெய் இருந்தால் டிஷ்யூம் இருக்குமே? இருக்கிறது. ஆனால் கதைக்குப் பொருத்தமாகவும் வில்லனோடு மோதுவதற்கான காரணத்தோடும் இருக்[illegible] [illegible]சிக்கு [illegible]யாக.

ஜீரணிக்கச் சிரமப்[illegible] சில விஷயங்கள் இருந்தாலும் படம் நல்ல விருந்துதான்.

- கௌசிகன்



# தவிப்பு

கருணையானந்தன்

ராஜா விடைபெற்றுக் கொண்டு போய் விட்டான்.

சோபாவில் சாய்ந்து உட்கார்ந்திருந்த ஜகதீசன் எதிரே கிடந்த 'இந்து' நாளிதழை எடுக்க நிமிர்ந்தார்.

என்ன அது?

குனிந்து ராஜா காலி செய்து வைத்திருந்த காப்பிக் கோப்பையினுள் உற்று நோக்கினர்.

கரைந்தும் கரையாத உப்புப் படிகங்கள்.

யாருடைய வேலை இது?

உள்ளே சாந்தா குமுறிக் கொண்டிருந்தாள். அவமானத்தால் அவளுடைய அழகிய முகம் சிவந்து போய்க் கிடந்தது. ஆத்திரம் பொங்கி எழ அழுகை முட்டிக் கொண்டு வந்தது.

கல்லூரியில் நடந்த சம்பவங்களுக்குக் கணக்குத் தீர்த்துக் கொள்ள இப்படியோர் எதிர்பாராத வாய்ப்புக் கிட்டியதே என்ற உற்சாகத்தில்தான், சர்க்கரைக்குப் பதில் உப்பை அள்ளிப் போட்டாள் காப்பியில்!

காப்பியைப் பருக மாட்டாமல் அவன் திண்டாடும் அழகை நன்ருகப் பார்த்து ரசிக்க வேண்டும் என்றுதானே அவனுக்கு எதிரே அமர்ந்திருந்த பெரியப்பாவின் பின்னல் போய் நின்ருள்.

அவனே காப்பியை நின்று நிதானித்து ரசித்துப் பருகினன்.

காலிக் கோப்பையைக் கீழே வைக்கும்போது நிமிர்ந்து அரை நொடிக்கும் குறைவான நேரம் அவளைப் பார்த்தானே ஒரு பார்வை...

உள்ளே ஓடி வந்து விட்டாள் சாந்தா.

கை இன்னும் மூக்கைத் தடவி விட்டுக் கொண்டிருந்தது.

''சரியான கல்லுளி மங்கன்...'' —பல்லைக் கடித்தாள் சாந்தா.

அவள் கணக்கைத் தீர்த்துக் கொள்ளப் பார்த்தாள். அவனே கணக்கை ஏற்றி வைத்து விட்டுப் போய் விட்டான்.

உடனடியாக ஏதாவது செய்தாக வேண்டும் என்று பொருமினள் சாந்தா.

மதுரையிலிருந்து வேலை கோரிச் சிபாரிசுக் கடிதம் கொண்டு வந்திருந்த ராஜாவை மீண்டும் மாலையில் வந்து சந்திக்கும்படி கூறி அனுப்பியிருந்தார் ஜகதீசன்.

பெரியப்பாவிடம் அவளுக்குச் சலுகை அதிகம். அவள் என்ன கேட்டாலும் தட்டாமல் நிறைவேற்றி வைப்பார்.

ராஜா எப்படிப்பட்டவன் என்று அவரிடம் சொல்லிவிட வேண்டும். அவனுக்கு வேலை கிட்டாமல் செய்து விட்டால்தான் தன் ஆத்திரம் அடங்கும் என்று நம்பினுள் பேதை.

அந்த முடிவுக்கு வந்தபின் அவள் கோபம் கொஞ்சம் தணிந்தது.

ஜகதீசன் ஆபீஸ் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்த போது அவருடைய அறைக்குள் வந்தாள் சாந்தா.

''என்ன சாந்தா... '' என்று விசாரித்தார் ஜகதீசன்.

இனியும் தயங்கிக் கொண்டிருந்தால் காரியம் கைமிஞ்சிப் போய் விடக்கூடும் என்றெண்ணித் துணிந்துவிட்ட சாந்தா ''வந்து... காலையில் வந்தாரே ராஜா... அவர் சரியான அயோக்கியர் பெரியப்பா... அவருக்கு வேலை போட்டுக் கொடுக்காதீர்கள்'' என்ருள்.

இதைக் கேட்டு வியப்படைந்த ஜகதீசன், ''அப்படியா?... அவனை எப்படித் தெரியும் உனக்கு?'' என்று கேட்டார்.

''அவர் எங்கள் கல்லூரியில்தான் படித்தார் பெரியப்பா''

''அது சரிம்மா... சிபாரிசுக் கடிதம் கொடுத்தனுப்பியிருக்கும் நண்பர் பொறுப்புள்ள ஒரு பெரியமனிதர்...ராஜா புத்திசாலி, தங்கமான பையன் என்று எழுதியிருக்கிருர்... நீயானல் அயோக்கியன் என்கிருய். நான் எதை எடுத்துக் கொள்வது?'' என்று கேட்டார் ஜகதீசன்.

''கடிதம் கொடுத்தனுப்பியவர் சரியாக விசாரித்துத் தெரிந்து கொண்டிருக்க மாட்டார் என்று நினைக்கிறேன். கல்லூரியில் நடந்ததையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டீர்களானல் நீங்களும் என் முடிவுக்குத்தான் வருவீர்கள்'' என்ருள் சாந்தா.

கல்லூரி எல்லைக்குள் ராஜாவைப் பார்த்திருந்தவர்கள் யாரும் அவன்தான் சற்று முன்னர் அத்தனை அமைதியாகப் பூனைபோல்



அமர்ந்து பேசிவிட்டுப் போனான் என்று சொன்னால் நம்பவே மாட்டார்கள்.

அவனுடைய கலகலப்பான சுபாவம் காரணமாக எப்போதும் அவனைச் சுற்றி ஒரு கூட்டம் இருக்கும். மாணவர்கள் ஒன்று கூடினால் சொல்லவா வேண்டும்! பேச்சு... அரட்டை.... அட்டகாசம்!

குறும்பு செய்து மற்றவர்களை மாட்டி வைத்துப் பிறரது பரிகாசத்துக்கு ஆளாக்கி விடுவான் ராஜா. என்றைக்கு ராஜாவிடம் மாட்டிக் கொள்வோமோ என்ற அச்சம் ஒவ்வொருவருக்கும் இருந்தது.

அவனிடம் அடிக்கடி மாட்டிக் கொண்டவள் சாந்தா. அவனுக்கும் அவளுக்குமிடையே ஒரு துவந்த யுத்தம் நடந்துவந்தது.

ஒரு சமயம் —

கல்லூரி ஆண்டு விழாவின்போது மாடியிலிருந்த ஹாலில் விருந்து நடந்தது. மற்றக் கலை நிகழ்ச்சிகள் கீழே திறந்த வெளி அரங்கில் நடப்பதாக ஏற்பாடாகியிருந்தது.

விருந்து முடிந்து கீழே இறங்கி வரும்போது படிக்கட்டுத்திருப்பத்தில் சாந்தாவின் காலணி ஒன்று நழுவி நாலைந்து படிகள் உருண்டோடி விட்டது.

அவளுக்கு முன்னால் இறங்கிச் சென்று கொண்டிருந்த ராஜா சப்தம் கேட்டுத் திரும்பினான். தஞ்சமென வந்து தன் காலடியில் தயங்கிய காலணிக்கு அபயம் தந்து பவ்யமாக அதை எடுத்து பாண்ட் பையினுள் செருகியவன் ஸ்லாக்கை இழுத்து விட்டுக் கொண்டு போய் விட்டான்.

சாந்தா செயலிழந்து போனாள்.

ஒரு காலில்மட்டும் காலணியைப் போட்டுக் கொண்டு போக முடியுமா என்ன? அதையும் கழற்றிப் பக்கத்திலிருந்த குரோட்டன்ஸ் செடிகளிடையே கோபமாக வீசிவிட்டுச் சேலையை இன்னும் நன்றாகத் தழைய விட்டுக் கொண்டு கலை நிகழ்ச்சிகள் நடக்கவிருந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தாள்.

மாணவிகளுக்கு மேடையருகே முன் வரிசையில் இடம் ஒதுக்கியிருந்தார்கள்.

சாந்தாவின் அருகே வந்து அமர்ந்த அவள் தோழி காஞ்சனா, ''காலில் செருப்பைக் காணோமே... எங்கேடி போச்சு?'' என்று கேட்டாள்.

''ம்... வார் அறுந்து போச்சு... 'காப்லர்' கிட்டே கொடுத்துட்டு வந்திருக்கிறேன்'' என்றாள் முழுப் பொய்யாக — வரவிருந்த ஆபத்தைக் கொஞ்சமும் அறியாமல்.

கலை நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின.

பாட்டுப் போட்டி முடிந்தபின் மாறுவேடப் போட்டி ஆரம்பமாகியது. ஒவ்வொருவராக வெவ்வேறு வேடங்களில் வந்து போய்க் கொண்டிருந்தனர்.

கடைசியில் செருப்புத் தைக்கும் தொழிலாளி ஒருவன் மேடையில் தோன்றினான்.

தன் தொழிலுக்குரிய பையைத் தோளிலிருந்து கழற்றி எடுத்து அருகே வைத்து அதனுள்ளிருந்து உபகரணங்களையும் பழைய செருப்புக்கள் சிலவற்றையும் அள்ளி வெளியே போடும்போது ஒரு ஜோடி புதிய காலணிகளும் வந்து விழுந்தன.

சாந்தாவுக்கு மூச்சே நின்றுவிடும் போல் ஆகி விட்டது.

சொல்லி வைத்தாற்போல் காஞ்சனாவும் பார்த்தாள்—பொருள் பதிந்த பார்வையாக.

''நீ உன் செருப்பைக் 'காதலர்' கிட்டே கொடுத்திருக்கேன்னு சொல்லியிருப்பாய் போலிருக்கு. நான் 'காப்லர்' கிட்டேன்னு எடுத்துக்கிட்டேன். வரவர எனக்குக் காது சரியாகவே கேட்க மாட்டேன் என்கிறதடி'' என்று பொடி வைத்துப் பேசினாள் காஞ்சனா.

சாந்தா பேசுவதற்கு ஒன்றுமே இருக்கவில்லை.

மேடையில் அவன் செருப்பில் ஏதோ செய்வது போல் பாவனை செய்து விட்டு நேரே அவள் எதிரே வந்து நின்று கொண்டு ''இந்தாங்கம்மா... தொழில் சுத்தமா இருக்கும். பார்த்துக் காசு கொடுங்க'' என்று சொல்லிச் செருப்பையும் அவள் காலருகே போட்டான்.

சாந்தா முகம் சிவந்து போனாள்.

''இப்பவே உன் செருப்பைத் தூக்கிக் கொண்டு அலைகிறார். இவரையே கல்யாணம் செய்து கொண்டுவிடு. உன் பேச்சைக் கேட்டுக் கொண்டு காலடியிலேயே கிடப்பார்'' என்று கேலி செய்தாள் காஞ்சனா.

இப்படி ஒன்றா இரண்டா? ராஜாவிடம் அகப்பட்டுக் கொண்டு சாந்தா பட்ட அவதிகள் ஏராளம்.



''நேற்றுத்தான் இந்த 'தர்மாஸ் பிளாஸ்க்'கை வாங்கினேன். சூடே நிற்க மாட்டேன் என்கிறதே?''

''அப்போ அது தர்மாஸ் பிளாஸ்க் இல்லே, 'அதர்மாஸ் பிளாஸ்க்' என்று சொல்லுங்கள்!'' — சம்பத் குமாரி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கல்லூரியில் நடந்த சம்பவங்களை ஒவ்வொன்றாகச் சாந்தா விவரித்துக் கொண்டே வருகையில் 'போன்' மணி அடித்தது.

''இதோ வந்துவிட்டேன்...'' என்று சாந்தாவிடம் சொல்லிவிட்டு எழுந்து சென்ற ஜகதீசன் இரண்டு நிமிடங்கள் போனில் பேசிவிட்டு வந்தார்.

''முக்கியமான விஷயம்... அவசரமாகப் போக வேண்டியிருக்கிறது சாந்தா. நீ என்ன சொல்கிறாய்... அவனுக்கு வேலை கொடுக்கக் கூடாது... அவ்வளவுதானே! சாயங்காலம் வந்தான் என்றால் விரட்டியடித்து விடுகிறேனே... போதுமா?'' என்று சொல்லிவிட்டு அவசரம் அவசரமாகப் பையைத் தூக்கிக் கொண்டு சென்று காரில் அமர்ந்துவிட்டார்.

சாந்தாவுக்குத் திருப்தியாக இருந்தது.

மாலையில் ராஜா தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு செல்லும் காட்சியைக் கற்பனை செய்து பார்த்துக் கொண்டாள். மனத்துக்கு மிக ரம்யமாக இருந்தது.

கடைத் தெருவுக்கு 'ஷாப்பிங்' போக வேண்டுமென்று சாந்தாவின் பெரியம்மா கமலா சொல்லியிருந்ததால் ஜகதீசனை ஆபீஸில் விட்டுவிட்டுக் காரைக் கொண்டு வந்திருந்தார் டிரைவர்.

'ஆமாம்... காலையில் ராஜா புறப்பட்டுச் சென்றபோது எதிர்ப்பட்ட டிரைவரும் அவனும் காம்பவுண்டு சுவர் அருகே நின்று ஏதோ பேசினார்களே' என்று நினைத்துக் கொண்ட சாந்தா டிரைவரிடம் போனாள். டிரைவர் கொஞ்சம் வயதானவர்.

''ராஜாவை உங்களுக்குத் தெரியுமா தாத்தா?''

''தெரியுமே. போன வருடம் வரை நான் மதுரையில்தானே வேலை பார்த்தேன். நான் குடியிருந்த அதே தெருவில்தானே ராஜா தம்பியும் இருந்தது. தங்கமான பிள்ளை. (...தங்கமான பிள்ளையா?!) யாருக்கு என்ன உதவி என்றாலும் அலுக்காமல் சலிக்காமல் செய்யும். அம்மாவுக்கு ஒரே பிள்ளை. அப்பாவும் இல்லை. 'என்ன தம்பி அம்மா சௌக்கியமா' என்று கேட்டேன்... பாவம்... கண் கலங்கிவிட்டது ராஜாவுக்கு. போன மாதம்தான் தவறிட்டார்களாம் (என்னது? அப்பா இல்லை... அம்மா இல்லை... உடன் பிறந்தோர் யாருமில்லையா... தனியாக... தன்னந்தனியாக — கடவுளே!). ஐயாவிடம் வேலை கேட்டு வந்ததாம். நிச்சயம் வேலை கிடைக்கும் என்று தைரியம் சொல்லி வைத்தேன். ஐயா நினைத்தால் நூறு பேருக்கு வேலை வாங்கித் தர முடியாதா — நீயே சொல்லும்மா... (என்னத்தைச் சொல்ல... நான்தான் பெரியப்பாவிடம் 'வகை'யாகச் சிபாரிசு செய்திருக்கிறேனே!)

ராஜாவின் மேலுள்ள அபிமானத்தால் அவனைப் பற்றி நிறையவே பேசிவிட்ட டிரைவர் போய் விட்டார்.

சாந்தாவுக்குக் குறுகுறுத்தது. குற்ற உணர்வு மெல்லத் தலைதூக்கியது. குழம்பித் தவித்தாள்.

ஹாலில் பெரியப்பாவின் குழந்தைகள் ரமேஷ் கண்ணனை அழவைத்துக் கொண்டிருந்தான். கண்ணனின் தொடையில் 'நறுக்'கென்று கிள்ளிவிட்டு 'ஓ'வென்று அவன் பெருங்குரலெடுத்து அழுவதைக் கைதட்டி ரசிக்கிறானே!

கண்ணன் மேல் ரமேஷுக்கு அன்பில்லையா?

இல்லாமலென்ன? அவனுக்கு இது ஒரு வேடிக்கை.

சட்டென்று ராஜாவின் செய்கைகளுக்கு ஒரு புது வியாக்கியானம் தெளிவாகியது அவள் நெஞ்சில். நல்லவரான ராஜா என்னைச் சீண்டினார் என்றால்... வயதுக்கேற்ற விளையாட்டு — அவ்வளவுதான்!

அத்தனை பெண்களில் அவர் ஏன் என்னிடம் மட்டும் அப்படி நடந்துகொள்ள வேண்டும்.

அவளுக்குச் சிலிர்த்தது.

தனக்குள் மெல்ல நகைத்துக் கொண்ட சாந்தா கண்ணாடி முன் போய் நின்று தன்னைத் தானே தீர்க்கமாகப் பார்த்து ரசிக்கலானாள்.

மதியம் உணவருந்த பெரியப்பா வீட்டுக்கு வரும்போது தான் காலையில் சொன்னதையெல்லாம் வாபஸ் பெற்றுக்கொண்டு 'ராஜாவுக்கு எப்படியும் வேலை கொடுக்க வேண்டும்' என்று வாதாட முடிவு செய்துகொண்டாள்.

ஆனால் ஒரு மணி சுமாருக்குப் பெரியப்பாவின் ஆபீஸ் பியூன் ஒரு கடித உறையைக் கொண்டு வந்து கொடுத்து ''ஐயா அவசரமாக பெங்களூர் புறப்பட்டுப் போய் விட்டார். ராஜா என்கிறவர் வந்தால் இதைக் கொடுத்துவிடச் சொன்னார்'' என்றபோது 'திக்'கென்றது சாந்தாவுக்கு.

உறையை வாங்கி ரேடியோ மேல் வைத்துவிட்டுப் போய்விட்டாள் பெரியம்மா. உள்ளே என்ன இருக்குமோ என்று திகிலடைந்தாள் சாந்தா.

''வேலையில்லை... நீ போகலாம்'' என்று எழுதி வைத்திருப்பாரோ பெரியப்பா.

அவளுக்கு ஒன்றுமே ஓடவில்லை. தவித்துப் போனாள்.

''என்ன சாந்தா... அப்போதிருந்து கவனித்துக் கொண்டேயிருக்கிறேன். அந்தக்

கங்கா பிரிட்ஜ், கான்பூர்.



கங்காவின் மேல்
ஒரு பாலம்

ஓவர்சீஸ் கம்யூனிகேஷன் ஸர்வீசஸ்
பம்பாய் 76.25 மீ



ஒரு மிகப்பெரிய
18 மாடிக் கட்டடம்

# டிஸ்கான்

## உபயோகித்து இந்த இரண்டும் ஸ்டீலை 50% மிச்சப்படுத்திற்று!



**டிஸ்கான் கோல்டு-ட்விஸ்டெட் ரிப்டு ரீயின்ஃபோர்ஸ்டு பார்ஸ், இரட்டிப்பு நன்மை அளிக்கின்றன. சாதாரண மைல்டு ஸ்டீல் பார்ஸை விடச் சிறந்த ரீயின்ஃபோர்ஸ்மெண்ட்டையும் ஸ்டீலில் அதிகபட்ச மிச்சத்தையும்தான்.**

இவை டாடா ஸ்டீலிலும் அவர்களது உப—லைசென்ஸிகளாலும் டிஸ்கான் 42, [illegible] தரங்களில் தயாரிக்கப் படுகின்றன. 6 மிமீ லிருந்து 36 மிமீ வரை குறுக்களவில் கிடைக்கின்றன. டிஸ்கான் பார்ஸின் விசேஷ ரிப் அமைப்பும் பெரிய அளவில் தாங்கக் கூடிய மேற் பரப்பு சாதாரண மைல்டு ஸ்டீல் பார்ஸை விட நூற்றுக்கு நூறு இறுக்கிய சக்தியைத் தருகிறது. டிஸ்கான் பார்ஸ் மிக அதிகமாக இறுக்கப்பட்டு விசேஷ தாங்கும் சக்தியையும் கொண்டது.

இவையனைத்தும் பெரிய பெரிய கட்டடங்கள், பாலங்கள், அணைக்கட்டுகள், கால்வாய்கள், அடித்தளங்கள், நீர்ப்பாசனம் மற்றும் மின் சக்தி அமைப்புகள் போன்ற முரட்டுக்கட்டடங்களுக்குச் சிறந்த சிக்கனமிக்க தேர்ந்தெடுப்பாகும்.

மற்ற விவரங்களுக்கு
தயவுசெய்து எழுதுங்கள்:
தி டைரக்டர் ஆஃப் மார்க்கெட்டிங்
அண்டு சேல்ஸ்,
தி டாடா அயர்ன் அண்டு ஸ்டீல்
கம்பெனி லிமிடெட்,
43 சௌரிங்கி ரோடு,
கல்கத்தா—700 071



**டாடா ஸ்டீல்**

கவரை எடுக்கிறாய். வைக்கிறாய்... என்ன விஷயம்?'' என்று கேட்டுவிட்டாள் கமலா.

அவ்வளவுதான்! சாந்தாவின் உணர்ச்சிகள் அணையை உடைத்துக் கொண்டு விட்டன. பெரியம்மாவைச் சரணடைவதைத் தவிர வேறு வழி புலப்படவில்லை அவளுக்கு.

கமலாவின் மார்பில் சாய்ந்து கொண்டு பொருமலானாள் சாந்தா. ஆதரவாக அணைத்துக் கொண்ட பெரியம்மாவிடம் எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்தாள்.

அனைத்தையும் பொறுமையாகக் கேட்ட கமலா ''அசடே... இதற்கா இத்தனை அழுகை?... உன் பெரியப்பா ஒன்றும் சின்னக் குழந்தையில்லை — உன் பேச்சைக் கேட்டு அப்படியே செய்வதற்கு. வெளியே போக வேண்டிய அவசரத்தில் உன்னோடு விவாதம் பண்ணிக் கொண்டிருக்க விரும்பாமல் உன் இஷ்டப்படி செய்வதாகச் சொல்லிவிட்டுப் போயிருப்பார். நீ வேண்டுமானால் பிறகு பாரேன்... உறையினுள் ராஜாவுக்குச் சாதகமான விஷயம்தான் இருக்கும்'' என்றாள் உறுதியாக.

கேட்க மகிழ்ச்சியாக இருந்தது சாந்தாவுக்கு.

''எப்படிப் பெரியம்மா இத்தனை உறுதியாகச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டாள் சந்தேகத்துடன்.

''அதற்குக் காரணம் இருக்கிறது'' என்று சொல்லிச் சிரித்தாள் கமலா.

ஐந்தே காலுக்கு ராஜா வந்துவிட்டான்.

''வாங்க தம்பி...'' என்று அவனை வரவேற்றுச் சோபாவில் அமரச் செய்தாள் கமலா.

சாந்தாவைக் கவனித்த ராஜா 'இவள் ஏன் இப்படிப் பரிதாபமாக முகத்தை வைத்துக் கொண்டிருக்கிறாள்' என்றெண்ணிக் குழம்பிக் கொண்டிருக்கையில் காப்பி எடுத்து வரும்படி சாந்தாவிடம் கமலா சொன்னாள். ராஜா பதறிப் போனான்.

மறுபடியுமா...! இதென்னடா சோதனை?

''காப்பி எதுவும் வேண்டாங்க... இப்பத்தான் குடித்து விட்டு வந்தேன்'' என்று மறுத்துப் பார்த்தான் அவசரம் அவசரமாக.

அவனுடைய கலவரத்தை வெகுவாக ரசித்த கமலா ''பயப்படாதீர்கள்.. சாந்தா நன்றாகவே காப்பி தயாரிப்பாள்'' என்று சொல்லிவிட்டுப் போய் ஜகதீசன் கொடுத்தனுப்பியிருந்த உறையை எடுத்து வந்தாள்.

இதற்குள் அவசரம் அவசரமாகக் காப்பி கலந்து எடுத்து வந்துவிட்டாள் சாந்தா. உறைக்குள் என்ன இருக்கிறது என்றறியும் துடிப்பு அவளுக்கு.

உறையை வாங்கிப் பிரித்த ராஜாவின் முகம் மலர்ந்தது.

''நான் அவசரமாக பெங்களூர் போகிறேன். மானேஜரிடம் எல்லா விவரமும் சொல்லியிருக்கிறேன். காலையில் ஆபீஸ் சென்று வேலை நியமன உத்தரவைப் பெற்றுக் கொள் — ஜகதீசன்'' என்று ரத்னச் சுருக்கமாக இருந்தது கடிதம்.

'நான் சொன்னேனில்லையா?' என்பதாகச் சாந்தாவைப் பார்த்தாள் கமலா.

ஆனால் சாந்தா ராஜாவைப் பார்த்துக் கொண்டிருந்தாள். ராஜாவின் மகிழ்ச்சி சாந்தாவின் முகத்தில் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

''சாப்பிடுங்க தம்பி... காப்பி ஆறிப் போகிறது'' என்றாள் கமலா.

கோப்பையைக் கையிலெடுத்துக் கொண்ட ராஜா சாந்தாவைப் பார்த்தான் பரிதாபமாக.

சாந்தா சிரித்து விட்டாள்.

''சர்க்கரை தான் போட்டிருக்கிறேன்...'' என்றாள். இரண்டாண்டுப் பழக்கத்தில் ராஜாவிடம் அவள் முதன் முறையாகப் பேசினாள் இப்போது.

ராஜா விடைபெற்றுக் கொண்டு போனபின் கமலாவிடம் கேட்டாள் சாந்தா: ''உள்ளே நல்ல செய்திதான் இருக்கும் என்று நீங்கள் உறுதியாக நம்பியதற்குக் காரணம் பிறகு சொல்கிறேன் என்றீர்களே.''

''ஓ... அதுவா! நீ காலையில் சொன்னதையெல்லாம் கேட்ட உன் பெரியப்பா ராஜாவைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருப்பார் தெரியுமா?... 'பயல் கல்லூரி வாழ்க்கையை நன்றாகத்தான் அனுபவித்திருக்கிறான்' என்று அவனை மனதுக்குள்ளாகவே பாராட்டியிருப்பார். ஏனென்றால் இன்று சாதுவாக இருக்கும் உன் பெரியப்பா கல்லூரி நாளில் போடாத ஆட்டமா...? ராஜாவிடம் நீ பட்டபாடு இருபது ஆண்டுகளுக்கு முன் நான் பட்டேன் உன் பெரியப்பாவிடம்!'' என்று சொல்லிவிட்டுப் பழைய நினைவுகளில் மூழ்கிப் போன பெரியம்மாவை வியப்புடன் பார்த்தாள் சாந்தா.









இலவசம்
இலவசம்
இலவசம்



# LIGHT AND HOOT TORCH LIGHT

## ஒரு JOY TOY தயாரிப்பு

வாங்கப்போனால் ரூ. 50 கிரயமுள்ள, ஜாய்டாய் தயாரிப்பான இந்த டார்ச் லைட்டை நீங்கள் முற்றிலும் இலவசமாகப் பெறலாம்!

மூன்று டார்ச் செல்களைக் கொண்டு பிரகாசமான ஒளியை நீண்ட தூரத்துக்குப் பாய்ச்ச வல்லதும், பித்தானை அழுத்தினால் ஸைரன் ஒலி எழுப்பி அக்கம் பக்கத்தாரைக் கூட்ட வல்லதும், மிக அழகான நவீன தோற்றம் உடையதும், உறுதியானதுமான இந்தப் பெரிய டார்ச் லைட்டை நீங்கள் இலவசமாகப் பெறலாம்.

நீங்கள் கல்கிக்குச் சந்தாதாரராகச் சேர்ந்து மூன்று ஆண்டு சந்தாவாக ரூ. 114 அனுப்பி வைத்தால் போதும், உடனே இந்த டார்ச்லைட் உங்களை வந்து அடையும்.

**அல்லது.**

நீங்கள் ஏற்கெனவே கல்கி சந்தாதாரராக இருந்தால் மேலும் மூன்றாண்டுகளுக்குச் சந்தாவைப் புதிப்பித்துக் கொண்டு இலவசமாக டார்ச்லைட்டைப் பெறலாம்.

**அல்லது.**

உங்கள் நண்பர்கள், உறவினர்களுக்கு மூன்று ஓராண்டுச் சந்தாவோ அல்லது ஒரு மூன்றாண்டுச் சந்தாவோ பரிசாக வழங்கி டார்ச் லைட்டை நீங்கள் இலவசமாகப் பெறலாம். கல்கி அனுப்பப்பட வேண்டிய விலாசங்களையும் தொகையையும் எமக்கு அனுப்புவதுடன் உங்கள் விலாசத்தையும் மறவாமல் குறிப்பிடவும்.

**அல்லது.**

உங்கள் நண்பர்கள், உறவினர்களிடமிருந்து மூன்று ஓராண்டுச் சந்தாக்களைச் சேகரித்து எங்களுக்கு அனுப்பி வைப்பதன் மூலமும் இந்த இலவசப் பரிசினை நீங்கள் பெறமுடியும்.

**முடிவு தேதி மே 15உ**

நிர்வாகி, கல்கி காரியாலயம், சென்னை - 32

# வியாபார நோக்கை மறவாத கலையுணர்வு!



## கே.பாலசந்தர் பேட்டி

''எனக்குப் பிடித்த படம் என்று ஒன்றை நான் கூற முடியாது. காரணம், ஒவ்வொரு வகையிலும் ஒவ்வொரு படம் நிறைவைத் தருகிறது. அதிலும் குறிப்பாகச் சிலவற்றை மட்டுமே கூற வேண்டுமென்றால் இப்படி வரிசைப் படுத்தலாம்:

''குடும்பத்திலுள்ள நகைச் சுவையை மட்டுமே மையமாகக் கொண்டு நான் எடுத்த படம் ''பாமா விஜயம்'' நகைச்சுவையில் அது என் மாஸ்டர் பீஸ்! காந்தி அடிகளின் போதனைகளுக்காகவே நான் உருவாக்கிய ஒரு படம் தான் ''புன்னகை.'' இது வரை யாருமே தொடாத ஒரு விஷயத்தை நான் திரையில் காட்டினேன். அதுதான் 'அபூர்வ ராகங்கள்.'

''மத்திய தரத்தை விடத் தாழ்ந்த இடம் ஒன்றைக் கதையாக்கினேன். அதுதான் ''தப்புத் தாளங்கள்.'' இப்படிப் பல வகையான படங்களை நான் எடுத்திருந்தாலும், முழுமையான காதல் கதை ஒன்றைப் படமாக்கவே இல்லை. தெலுங்கில் ''மரோ சரித்ரா'' என்று நான் எடுத்த படம் இருபத்தைந்து வாரங்களைத் தாண்டி ஓடியது. அதே படம் பெங்களூரில் 275 நாட்களுக்குப் பிறகு இன்னமும் ஓடிக் கொண்டிருக்கிறது. இது முழுமையான காதல் கதை. இதுவும் எனக்குப் பிடித்த படங்களிலொன்று. தமிழில் இதை எடுக்க இருக்கிறேன். பெயர் ''அலைகள் எழுதிய கவிதை'' - இவ்வாறு பால சந்தர் கூறி நிறுத்திய போதிலும் நான் அவரை விடுவதாக இல்லை. தொடர்ந்து என் நிலைக்கு அவரை இழுத்தேன் :

''இப்படி பல படங்கள் உங்களுக்குப் பிடித்திருந்தாலும் உங்களுக்குள் நீங்களே ரசித்த படம் இவற்றில் ஒன்று இருக்குமே!''

'' ''அபூர்வ ராகங்கள்'' – இந்தப் படத்தின் மேல் எனக்கு Personal affinity ஏற்படக் காரணம், பல படங்களில் இருக்கும் வழக்கமான விஷயங்கள் இதிலில்லை. வசனங்கள் குறைவாக உள்ள படம். புதுமாதிரியான உணர்ச்சியைக் கொண்ட கதை. இத்தகைய உணர்ச்சிகளை மக்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் இயக்க வேண்டும். இல்லையென்றால் மொத்தப் படத்தையே அவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். கமலும், ஸ்ரீவித்யாவும் இந்தப் படத்தில் தங்களது நடிப்பால் எனக்குப் பக்க பலமாக இருந்தார்கள். மேலெழுந்த வாரியாகத் தங்களது பாத்திரங்களைப் பாராமல் அந்தப் பாத்திரத்தின் தன்மை, அதற்குத் தேவையான நடிப்பு என்ன என்பதை ஆழ்ந்து சிந்தித்துச் செயல் பட்டார்கள்.

''கதாநாயகியே இப்படத்தில் கர்நாடக இசைப் பாடகியானதால் கர்நாடக இசை



அபூர்வ ராகங்கள் படத்தில் ஜெயசுதா, மேஜர் சுந்தரராஜன், ராஜி, நாகேஷ், கமலஹாசன், ஸ்ரீவித்யா

கலந்த மெல்லிசையை நான் இதில் முக்கிய மாகக் கவனித்து அமைக்கச் சொன்னேன். அதற்குத் தன் முழு ஒத்துழைப்பையும் தந்தார் எம்.எஸ். விஸ்வநாதன். இவ்வளவுக்கும் மேல் நம்பும்படியான திரைக் கதை. இவை போதாதா?''

''இந்தப் படம் ''40 carats'' என்ற ஆங்கிலப் படத்தைப் பார்த்து எடுக்கப்பட்டது என்று கூறுகிறார்களே.''

''இப்படிக் கூறுபவர்கள் எல்லாருமே விக்ரமாதித்தன் கதையைப் படிக்காதவர்களாகத்தான் இருப்பார்கள். அந்தப் படத்தில் ஒரு காட்சியில் ஒரு விடுகதை இருக்கிறது. அதைக்கூட நான் விக்ரமாதித்தன் கதையிலிருந்து தான் எடுத்தேன். அப்படி எடுத்தாலும், இக்காலத்துக்கு ஏற்ற வகையில் மாற்றிக் கொண்டேன். அவ்வளவுதான். இதற்கு முன்னால் நான் வெளி நாட்டுக்குக் கூடப் போனதில்லை. சமீபத்தில்தான் நான் சிங்கப்பூர் மலேஷியாவுக்குச் சென்று வந்தேன். இது சுமார் ஐந்து வருடங்களுக்கு முன்பு எடுத்த படம். இதை யெல்லாம் விடுங்கள். நான் காப்பி அடித்துத்தான் படமெடுக்கிறேன் என்றால் இதற்குத் தேசிய விருது கிடைக்குமா? நானேயே நான் ஒரு காதல் கதை எடுக்கிறேன் என்றால் Romeo and Juliet கதையைத் தழுவித்தான் எடுத்தேன் என்று சொல்வார்களோ? பாலசந்தர் படம் எது வெளி வந்தாலும் ஏதாவது குறை கூற வேண்டும். அன்றும் இதே கேள்விகள் கேட்கப்பட்டன. நான் இதற்கெல்லாம் பதில் சொல்வதாக இல்லை என்று கூறினேன்.''

''உங்களது ஒவ்வொரு படமும் கேள்விக்குறியிலேயே முடிகிறது என்றும், Positive answer ஏதும் நீங்கள் கூறுவதில்லை என்றும் கூறப்படுவதற்கு உங்கள் பதில்?''

''Positive answer என்பது அபத்தம். அப்படித்தான் கதை முடிய வேண்டும் என்று என்ன நியதி? பல கேள்விகளுக்கு இன்றும் என்றும் பதிலே கிடையாது. நான் எவ்வளவு படத்தில் கேள்விக் குறியைப் போட்டு விட்டேன்? சரி குறிப்பிட்ட இந்தப் படத்தையே எடுத்துக் கொள்வோம். படத்தின் பெயர் ''அபூர்வ ராகங்கள்'' என்பதால் முடிவில் நிறைவு அல்லது சுபம் என்பதற்கேற்ப மங்களம் என்று போட்டேன். எப்பொழுதுமே கச்சேரிகளில் மங்களமில்லாமல் முடியாது. ஆனால் நான் அந்த வார்த்தைக்குப் பிறகு ஒரு கேள்விக் குறி சேர்த்துக் கொண்டேன். ஏன்? எதற்காக? என்ற கேள்விகளை மக்கள் கேட்பதற்காகவும் பார்த்த படத்தைப்பற்றி அவர்களைப் பேச வைப்பதற்காகவும் அவர்களைச் சிந்திக்க வைப்பதற்கும் தான் இப்படிச் செய்தேன். என்னைப் பொறுத்தவரை இது சிறந்த முறை என்று நான் நினைக்கிறேன்.''

''அரங்கேற்றத்திற்குப் பிறகு பாலசந்தர் செக்ஸ் சடஜெக்டுகளையே கையாள்கிறார் என்ற குற்றச் சாட்டுக்கு நீங்கள் கூறும் பதில் என்ன?''

'''அது முட்டாள்தனமான வாதம்' என்பதுதான் என் பதில். அரங்கேற்றம்



⌘ அபூர்வ ராகங்களில் கமலின் ஒரு தோற்றம்

செக்ஸ் பற்றியதா? கண்டிப்பாகக் கிடையாது. ஒரு பெண் தன் குடும்பத்தைப் பொருளாதார நிலையில் உயர்த்த முயல்கிறாள். ஆக இது பொருளாதாரப் பிரச்னை தானே ஒழிய செக்ஸ் இல்லை. அடுத்து வருவது ''அவள் ஒரு தொடர்கதை''. ஒரு பெண்ணின் குண சித்திரம். அதற்கு ஏற்றாற்போல் நான் கதையை அமைத்து எடுத்தேன். இங்கும் செக்ஸுக்கு இடமில்லை. மூன்றாவது 'அபூர்வ ராகங்கள்.' காதலுக்கு வயது, வரம்பு இவை எல்லாம் கிடையாது. சிலபேர் பொருந்தாத காதல் என்றுகூறுகிறார்கள். பொருந்தாக் காதல் என்ற வார்த்தையே தவறு. காதல் இப்படித்தான் இருக்க வேண்டுமென்று யார் அளவு கோல் வைத்து அளப்பது? படத்தில் எந்த ஒரு இடத்திலும் கதாநாயகியின் உடலழகைப் பார்த்து அவன் விரும்பினான் என்பதே இல்லை. செக்ஸ் ஸப்ஜெக்ட் என்றால் மன்மத லீலையை வேண்டுமானால் சொல்லலாம். ஏனென்றால் ஒரு மனிதனின் பலவீனங்களைத்தான் நான் இதில் படமாக்கியிருக்கிறேன். ஆனால் இதில் கூட ஆபாசமான அல்லது அருவருக்கத்தக்க காட்சிகள் இல்லை. அந்தப்படம் ஹிந்தியில் ''டப்'' செய்யப்பட்டு 100 நாட்கள் ஓடி ஒரு சாதனை புரிந்துள்ளது. இப்பொழுது வந்த ''தப்புத் தாளங்கள்'' கூட தாழ்த்தப்பட்ட ஒரு வர்க்கத்தைப் பற்றிய கதைதானே ஒழிய அதிலும் செக்ஸுக்கு இடமில்லை. ஒரு தொழில் என்று வந்து விட்டால் அதன் தன்மைகள், அதன் செயல் முறைகள் ஆகியவைகளைத் தான் காட்ட முடியுமே தவிர அதைவிட்டு வேறு பாதையில் நான் எப்படிப் போக முடியும்? நான் தப்புத்தாளங்களைப் பொறுத்த வரையில் சொல்ல நினைத்தவைகளைச் சிறிது Rawவாகவே கூறியிருக்கிறேன் என்று வேண்டுமானால் கூறலாம். Sex is a broad subject. பார்ப்பவர் கண்ணோட்டத்தைப் பொறுத்திருக்கிறது. நான் செக்ஸ் ஸப்ஜெக்ட்தான் எடுக்கிறேன் என்று கூறுபவர்கள் நுனிப்புல் மேய்பவர்கள். அதன் காரண காரியங்களைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க முடியாதவர்கள். அல்லது, விரும்பாதவர்கள்.

''ஒரு குழந்தை பிறக்கிறது என்பது காட்சி என்று வைத்துக் கொள்வோம். அதை real ஆக எடுக்கலாம் அல்லது Suggestive ஆக எடுக்கலாம். Authentic ஆகவோ அல்லது Artistic ஆகவோ எடுக்கலாம். நான் மற்றவர்களிடமிருந்து மாறுபட்டு என் வழியில் எடுக்கிறேன்.''

''ஆக நீங்க Commercial டைரக்டர் ஆன போதிலும் படமெடுக்கும் முறையிலே தனித் தன்மைகளைப் பெற்றிருக்கிறீர்கள். ஆங்காங்கே Compromise செய்தாலும் தரத்தையும் கவனிக்கிறீர்கள். You are a commercial film maker with an artistic tint.''

பேட்டி: சலன்.

# இரு கேரம் நட்சத்திரங்கள்

சென்னை நகரசபை இண்டோர் ஸ்டேடியம் சர்வதேசக் குழந்தைகள் ஆண்டில் காரம்போர்ட் ஆட்டத்தில் இரு தேசிய சாம்பியன் நட்சத்திரங்களைப் 'புகழேணியில் உயர்த்தியிருக்கிறது! மகாராஷ்டிராவைச் சேர்ந்த சூர்யகாந்த் பைராஜு, ஹைதராபாத்தைச் சேர்ந்த ஆரத்தி ஜோபன்புத்ரா!

ஒரே நாளில் 115 போர்டு ஆட்டம் சளைக்காது ஆடி வெற்றி பெற்ற சூரியகாந்த் பைராஜு தேசிய சாம்பியன்கள் வாஸர், காம்ளியையும் மூக்கின் மேல் விரல் வைக்க வைத்த இளம் நட்சத்திரம்! நான்காவது வகுப்பு படிக்கும் சூரிய காந்த் பைராஜுக்கு வயது பன்னிரண்டு தான் ஆகிறது! வாழ்க்கைத் தரத்தில் அடிமட்டத்திலிருந்து தோன்றித் துணிவுடன் முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் மாணவன்.



படங்கள்: 1. பைராஜுவுக்கும் போக்குவரத்து மந்திரி பரிசு வழங்குகிறார்.
2. ஆரத்தி எம். ஜோபன்புத்ரா.

●

தாத்தா நந்த்லால் ஜோபன் புத்ரா நினைவுப் பரிசை பேத்தியே தன் வீட்டுக்கு எடுத்துச் சென்று விட்டாள்! சார்மினார் வடிவில் அமைந்த பரிசு அது.

ஹைதராபாத்தைச் சேர்ந்த ஆரத்தி எம். ஜோபன் புத்ராவுக்கு இரட்டைக் கௌரவம்.



சப் ஜூனியர், ஜூனியர் சாம்பியன் பட்டங்கள் கிடைத்தன.

ஏழு வயதில் காரம் பயிற்சியில் மூழ்கிய ஆரத்தி பத்தாவது வயதில் தேசியப் போட்டியில் கலந்து கொள்ளும் திறமை பெற்றார்.

ஆறாவது வகுப்புப் படிக்கும் ஆரத்தி வகுப்பில் முதல் ராங்க்! அவளுக்கு டாக்டராக வேண்டும் என்ற ஆசையாம்! —குண்டுமணி

# அணுயுகத்தை அறிமுகப்படுத்தியவர்

இருபதாம் நூற்றாண்டின் மிகப்பெரிய புரட்சியாளராக விளங்கி நாம் வாழும் உலகை மாற்றியமைப்பதில் பெரும் பங்கேற்றவர்;

ஆனால் துப்பாக்கியை அவர் தொட்டதில்லை; யுத்தங்களையும் பலாத்காரத்தையும் அடியோடு வெறுத்தவர்.

அவருக்கு மிகவும் பிடித்தமானவை இன்னிசை, சைக்கிள் ஓட்டுவது, குதிரை ஏற்றம், பாய்மரப் படகு செலுத்துவது, கானகங்களில் நீண்ட தூரம் நடப்பது;

குழந்தைகளுக்குக் கணக்குச் சொல்லித்தருவதில் அவருக்கு ரொம்ப ஆசை; ஆனால் பெரும்பாலும் தவறான விடைகளையே காண்பார்!

அமைதியான இம்மனிதர் தமது அறிவாற்றலால் பௌதிகத் துறையில் புரட்சிகரமான கண்டுபிடிப்புக்களைச் செய்து இவ்வுலகுக்கு அணு யுகத்தை அறிமுகப்படுத்தினார்.

அவர்தான் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன். அவரது நூற்றாண்டு விழாவை மார்ச் 14ல் உலகம் கொண்டாடியது.

ஐன்ஸ்டைனின் அறிவாற்றல் பலரைப் பயபக்தி கலந்த வியப்பில் ஆழ்த்தியுள்ளது. அவரது ரிலடிவிடி கொள்கையைப் புரிந்து கொண்டவர்கள் இந்த உலகிலேயே மூன்றே பேர்தான் என்று ஒரு சந்தர்ப்பத்தில் கூறப் பட்டது. எனினும் ஐன்ஸ்டைன் தாமே அந்த ரிலடிவிடி கொள்கையைப் பிரபலப்படுத்த, அதன் பரவலான அம்சங்களையும் விசேஷ அம்சங்களையும் நூறு பக்கங்களுக்குள்ளாக, உயர் நிலைப்பள்ளிப் படிப்பு படித்தவருக்கும் புரியும்படி விரித்துரைத்தார்.

1905ல் ஐன்ஸ்டைன் தமது கொள்கையை வெளியிட்ட போது பௌதிகம் ஒரு தேக்க நிலையை அடைந்திருந்தது. ஏனெனில் அது வரை பௌதிக உலகில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த நியூட்டன் விதிகள் நவீனக் கண்டு பிடிப்புகளுக்குப் பொருந்தாதனவாகி விட்டிருந்தன. புதிய கண்டு பிடிப்புக்களுக்கு விளக்கம் காண இயலவில்லை. ஐன்ஸ்டைனின் ரிலடிவிடி கொள்கை பல சிக்கல்களை விடுவித்தது.

ஐன்ஸ்டைனைச் சிறு வயதில் அறிந்தவர்கள் அவர் ஒரு மாமேதையாக உருவாக முடியும் என்று எதிர்பார்க்கவே யில்லை. ஜெர்மனியில் பிறந்த ஆல்பர்ட், படிப்பு விளையாட்டு எதிலுமே மெத்தனம் காட்டினான். மூன்று வயது வரை அவனுக்குப் பேசவே வரவில்லை! அவன் தகப்பனார் ஒரு முறை தலைமை ஆசிரியரைச் சந்தித்து, ''ஐன்ஸ்டைன் எதிர்காலத்தில் எந்தத் துறையில் ஈடுபட வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''எதுவானால் என்ன? எதிலுமே அவன் பிரகாசிக்கப் போவதில்லை!'' என்று பதில் வந்தது.

சுதந்திர மனப்பான்மையுடன் விளங்கினான் ஆல்பர்ட். தன் மீது யாராவது அதிகாரம் செலுத்தப் பார்ப்பதை வெறுத்தான். தனக்குப் பிடித்ததைத்தான் படிப்பான். பிடிக்காத பாடங்களைத் தொட மாட்டான். இப்படிப் பட்ட ஆல்பர்ட், உயர் நிலைப் பள்ளியிலிருந்து வெளியேற்றப் பட்டதில் வியப்பில்லை. அவன் வகுப்பில் இருப்பது மற்ற மாணவர்களுக்கு இடைஞ்சல் என்று காரணம் காட்டப்பட்டது!

ஸ்விட்சர்லாந்து தேசத்தில் ஜூரிச் நகரில் பாலிடெக்னிக் பள்ளியில் சேர பிரவேசப் பரீட்சை எழுதி அதில் தோல்வியுற்றான் ஐன்ஸ்டைன். ''நான் பரீட்சைக்குத் தயாரித்துக் கொள்ளவே இல்லை. எப்படி வெற்றி பெற முடியும்?'' என்று கேட்டான்!



ஆல்பர்ட் ஐன்ஸ்டைன்

1896ல் ஒருவாறு சேர்த்துக் கொள்ளப் பட்டான் என்றாலும் அவன் போக்கு மாறவில்லை. ''சோம்பேறி நாய்'' என்று ஒரு பேராசிரியர் அவனை வர்ணிக்க, பௌதிகப் பேராசிரியரோ, ''நீ இங்கு ஏன் வந்து சேர்ந்தாய்? மருத்துவமோ சட்டமோ பயிலப்போயிருக்கலாமே'' என்று அங்கலாய்த்தார். 1900ம் ஆண்டில் எப்படியோ பரீட்சைகளில் தேறி வைத்தான் ஐன்ஸ்டைன். சிபாரிசு பிடித்து மூன்றாந்தர பௌதிக நிபுணராக ஒரு நிறுவனத்தில் சேர்ந்தான்.

இங்கேதான் ஐன்ஸ்டைன் ஓய்வு நேரத்தில் உலகப் புகழ் பெறப்போகும் தமது பௌதிகக் கருத்துக்களைத் தயாரிப்பதில் முனைந்தார்.

1905ல் ரிலடிவிடி கொள்கை பற்றிய அவர் கட்டுரை அவரை மறுபடி கல்வித் துறைக்கு அழைத்துப் போய் நாளடைவில் ஜெர்மனியிலேயே பேராசிரியராக்கியது.

1919ல் பிரிட்டிஷ் விஞ்ஞானிகள், ஒளி, சூரியனைத் தாண்டிச்செல்கையில் வளைந்து கொடுக்கிறது என்று நிரூபித்



# லட்சுமி

## பட விமரிசனம்

திக்கற்றவர்களுக்குத் தெய்வம் துணை. அநாதையான லக்ஷ்மி சகோதரிகளுக்கு இப்படத்தில் அநுமாரே வழித்துணை.

நாகப்பன் தலைமையில் இயங்கும் ரௌடிக் குழு வளர்த்த கடா, பல அப்பாவிகளைப் 'பதம்' பார்க்கிறது. வளர்த்த கடா மார்பில் பாயும் என்பார்கள். ரௌடிகள் தலைவன் நாகப்பன் (ஸ்ரீகாந்த்) வளர்த்த கடா கடைசியில் அவனையே பதம் பார்த்ததோடு ரௌடித்தனத்துக்கு முற்றுப் புள்ளியும் விழுகிறது!

கிராமத்தில் புதிய அணை கட்டும் திட்டத்துக்குச் சர்வே பண்ண ஜீப்பில் வருகிறார் சங்கர், தம் துணைவன் கண்ணனோடு! ஆனால் சர்வேயர் சங்கர் கிராமத்தில் லக்ஷ்மி(ஸ்ரீதேவி)யின் உள்ளத்தை அளப்பதோடு சரி! அதுவும் உலகளந்த பெருமாளின் தயவினால்தான்!

சர்வேயரோடு துணைக்கு வந்த கண்ணன் (சுருளிராஜன்) சும்மா இருப்பாரா? மண்ணை அளக்காமல் தரையில் புரண்டு உருண்டு காதலியைத் தம் வசம் இழுக்க முயல்கிறார்! கண்ணனது காதலுக்குக் காதலியின் அக்காக்காரி (காந்திமதி) அணை போடுகிறாள்! ஆனால் கண்ணன் காதல் விவகாரம் கட்டு மீறித்தான் போகிறது. கடைசியில் பஞ்சாயத்து இவர்கள் காதல் விவகாரத்தை அலசுகிறது!

'தென்னை மரத்திலே தென்றல் அடிக்குது!' 'பந்தயத்திலே!' 'மேளம் கொட்டும் நேரம் வரும்!' இம் மூன்று பாடல்களுமே படத்தின் 'ஹிட்'டாக அமைந்தால் ஆச்சரியமில்லை!

துள்ளித் திரியும் கிராமத்துப் பருவ மங்கை லக் [illegible] க ஸ்ரீதேவி பவனி வந்து பதவிசாக நடித்து நற்பெயர் [illegible] ! முதல் படம் லக்ஷ்மியை டைரக்ட் செய்ய [illegible] தாலே வயதான டி. கே. மோகனுக்கு நல்ல எதிர்க [illegible] ். ஆபாசத்துக்கு அதிகம் இடம் கொடுக்காத 'லக்ஷ்மி' [illegible]-ஹாவென்று ஓடாமல்இருக்கலாம். ஆனால் தெய்வ பக்தி உள்ளவர்களுக்கு ஆறுதல் தரக் கூடிய படம்!

— பி. எஸ். எம்.

---

தார்கள். இது ஐன்ஸ்டைனின் கொள்கைக்கு நிருபணமாகி விடவே அவர் பெரும்புகழ் எய்தினார்.

1921ல் நோபல் பரிசு பெற்றார். அது ரிலடிவிடி கொள்கைக்காக அல்ல. ஃபோட்டோ எலெக்ட்ரிக் எஃபெக்ட் என்ற தத்துவத்துக்காக. இந்தத் தத்துவம் ஒளியை, ஓர் அலையாகவும் கருதலாம், துகளாகவும் எண்ணலாம் என்கிறது. ஒரு பெரிய சர்ச்சைக்கு முடிவு கட்டின கொள்கை அது.

அரசியலைப் பொறுத்த மட்டில் ஐன்ஸ்டைன் ஒரு சோஷலிஸ்டு; ஒரே உலகம் என்ற அடிப்படையில் சமாதானப் பிரியர். தமது அரசியலையும் விஞ்ஞானத்தையும் ஒன்றை ஒன்று பாதிக்க அவர் அனுமதித்ததில்லை. இதில் உறுதியாக இருந்த அந்த யூதர், ஹிட்லரின் ஜெர்மனியில் நீண்டகாலம் இருக்க முடியவில்லை. 1933ல் அமெரிக்கா வருமாறு அழைப்புக் கிடைத்த போது உடனே ஒப்புக் கொண்டார்.

ஹிட்லர் அணுகுண்டு தயாரிப்பு முயற்சிகளில் ஈடுபட்டிருப்பதாகச் செய்தி வந்த போது அணு சக்தித் துறையில் ஆராய்ச்சிகளைத் துரிதப் படுத்துமாறு ரூஸ்வெல்ட்டுக்கு எழுதினார்.

அண்ட சராசரமும் ஒரு நியதிக்குட்பட்டு இயங்குகிறது; இந்த நியதிக்குக் காரணமான விஞ்ஞான விதிகளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று அவர் தமது வயதான காலத்தில் கருதினார். இது மனிதனுடைய அறிவுக்கு மீறிய செயல் என்பதை அவரால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. ''கடவுள் சராசரத்தை வைத்துப் பகடை ஆடவில்லை'' என்று அவர் திரும்பத் திரும்பச் சொன்னார். மேற்கூறிய விதிகளைத் தாமே கண்டுபிடித்துக் கூறவும் முற்பட்டார். ஆனால் அம்முயற்சியில் தோல்வி கண்டார்.

இது ஒரு புறமிருப்பினும் நவீன பௌதிகத்தில் அவர் ஒரு மாமனிதராகக் கருதப்படுகிறார். குழந்தைத்தனமான குறும்புகளை இறுதி நாள்வரை கைவிடாத மாமேதை அவர்!

(ஆதாரம்: எர்ல். என். மிடில்மேன் எழுதிய கட்டுரை.)

# (வி)சித்திர அனுபவங்கள்

பத்ரிநாத் போக ரிஷிகேசத்தில் வந்து தங்கினார் சில்பி. முதலில் கிளம்பிய பஸ் ஒன்றில் தம்முடைய உபகரணங்களுடன் கிளம்பி விட்டார். அவருடைய ஓவிய உபகரணங்கள் பஸ்ஸின் மேல் பகுதியில் ஏற்றப்பட்டன.

பாதி வழி போய்க்கொண்டிருக்கும் போது பஸ்மேல் பகுதியில் இருந்த சில சாமான்கள் நழுவி வெளியே விழுந்து விட்ட பிரமை சில்பிக்கு. பஸ் கண்டக்டரிடம் தமக்குத் தெரிந்த ஹிந்தியில் தம் சந்தேகத்தைச் சொன்னார். கண்டக்டர் ஏதோ பதில் சொன்னாரே தவிர பஸ்ஸை நிறுத்தவில்லை.

ஓடிக் கொண்டிருந்த பஸ் சில மைல்கள் தள்ளிப் போய்ப் பாறைச் சரிவுகளைத் தவிர்க்க நின்றது. அந்த நேரத்தில் எதிர்பாராத விதமாக பத்ரிநாத் போகும் இரண்டாவது பஸ்ஸும் பின்னாலேயே வந்தது. இரண்டாவது பஸ் கண்டக்டர், ஒரு பெட்டியை எடுத்து வந்து முதல் பஸ் பிரயாணிகளிடம் விசாரித்தார். வழியில் கிடந்ததாகச் சொன்னார். சில்பியின் ஓவிய உபகரணங்கள் இப்படித் திரும்பி வந்தன!

பத்ரிநாத் ஆலய நிர்வாகம் இவருடைய விருப்பத்திற்கு ஒத்துழைக்க மறுத்தது. வசதி செய்து கொடுக்க விரும்பவில்லை.

சில்பி ஆலயத்துக்கு வெளியே உட்கார்ந்து ஆலயத் தோற்றத்தையாவது வரையலாம் என்று அமர்ந்தார். அந்த நேரத்தில், எல்லைப் படையைச் சேர்ந்த உயர் ராணுவ அதிகாரி ஒருவர் தரிசனத்துக்கு வரப்போவதாகவும், ஆலயப் பகுதியைச் சுற்றி யாரும் இருக்கக் கூடாது என்றும் கண்டிப்பு செய்ய ஆரம்பித்தனர் சில சிப்பந்திகள். சில்பியையும் அப்புறப் படுத்த முயன்றனர்.

இதைக் கவனித்துக் கொண்டே அந்த ராணுவ அதிகாரி வந்து விட்டார். அவர் வடநாட்டவர். நேராக சில்பி அமர்ந்திருந்த இடத்துக்கு வந்து அவர் ஈடுபட்டிருந்த காரியத்தைக் கவனித்தார்.

''ஓ! நீங்கள்தான் சில்பியா?'' என்று ஆனந்தக் கண்ணீர் பொங்க ஆங்கிலத்தில் கேட்டுக் கொண்டே அவர் கையைப் பிடித்துக் கொண்டார். அந்த அதிகாரியின் அன்னையின் பூஜை அறையில் சில்பி வரைந்த சுவர்ண அன்னபூரணியின் திருஉருவம் இடம் பெற்றிருக்கிறதாம்.

அப்புறம் கேட்பானேன்? அந்த அதிகாரி சில்பிக்கு பத்திரிநாத் ஆலயத்தை எல்லாக் கோணங்களிலிருந்தும் வசதியாகத் தீட்ட வழி செய்து கொடுத்தார்.



சிற்பம் சித்திரமாகிறது! — நாமக்கல் ஆஞ்சநேயரும் சில்பியின் கைவண்ணமும்

துவாரகைக் கோவிலை ஓவியத்தில் வடிக்கப் போயிருந்த போது வேறு வகை அனுபவம். ஏற்றுக் கொண்டிருந்த வேலை பாதி நடந்து கொண்டிருக்கும் போது இரணம் வந்தது. சில நண்பர்களுடன் சமுத்திர ஸ்னானத்திற்குக் கிளம்பினார்.

அலைகள் குறைவு என்றுதான் கடலில் இறங்கினார்கள். ஆனால் எதிர்பாராத ஒரு ராட்சத அலை இவர்களைப் புரட்டி இழுத்து விட்டது. சில்பி அனேகமாக மூழ்கி விட்டார். ''துவாரகநாதா! உன் திருப்பணியைப் பாதியில் விட்டுப் போகிறேனே!'' என்று கதறிக் கொண்டே கடைசி வாய்த் தண்ணீரையும் குடித்து விட்டார்.

அப்புறம் அவருக்கு நினைவு வந்தபோது அவர் மணற் பரப்பில் கிடத்தப் பட்டிருந்தார். யாரோ அவர் குடித்திருந்த கடல் நீரை வெளிக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். சில்பி பிழைத்து விட்டார். துவாரகைக் கோவிலை வரையும் திருப்பணியும் திருப்தியாக முடிந்தது.

நாமக்கல்லைச் சேர்ந்த ஓவியர் சில்பிக்கு சமீபத்தில் அறுபதாவது ஆண்டு விழா நடந்தது.

— கோமதி ஸ்வாமிநாதன்

# சினிமா ஆருடம்

அடுத்த சில ஆண்டுகளில் என்னென்ன திரைப் படங்கள் தயாரிக்கப் படும் என்பதை, மூக்காலும் உணர்ந்த (முக்காலும் அல்ல, மூக்காலும்) எழுத்தாளர் ஏகாம்பரம் அவற்றை இங்கு தருகிறார்.

— கமல்

பாலசந்தரின் 'விலைப் போன சுருதிகள்' படமும் அதைத் தொடர்ந்து, ''பாட மறந்த பல்லவிகள்'' படமும் வரும்;

விலைப்போன சுருதிகள் ஒரு சினிமா நடிகை அல்லது மேக் அப் மேன், இவர்களிடையே ஏற்படும் ஒரு தலைக் காதலை விவரிக்கும். எவ்வித உணர்ச்சியும் இன்றி, சம்பளம் வாங்குகிற காரணத்தால் நடிகையின் முகம், கன்னம் கழுத்து, முதலிய இடங்களைத் தொட்டு மேக்அப் போடும் அவன், நடிகையை விட வயதில் சிறியவனாக இருக்கின்றான். தன்னுடன் நடிக்கும் கதாநாயகர்களின் காதல் சீன்கள் தராத சிலிர்ப்பு அவனுடைய ஸ்பரிசத்தால் அவளுக்கு ஏற்படுகிறது. அவளைப் பொறுத்தவரை அவன் ஒரு 'அலுவலகம்' அவ்வளவுதான். அவளோ திருமணமானவள். பணத்தால் அவனை விலைக்கு வாங்கப் பார்க்கிறாள். இப்படி போகும் கதை. 'சுருதி விலைப் போனது இசை சுகப்படுமோ?' என்ற கேள்வியுடன் முடியும்.

'பாட மறந்த பல்லவிகள்' படத்தில் ஒரு இசைக் கலைஞனும், மிருதங்கக் கலைஞனும், வயலின் வாசிக்கும் அழகியைக் காதலிக்கிறார்கள். அவளுக்குக் கஞ்சிரா வித்துவான் மீது காதல். இந்தப் படத்திற்கு வீணை பாலசந்தர் வசனம் எழுதக்கூடும்.





முழுக்க முழுக்கப் புது முகங்களைக் கொண்ட படத்தை ஸ்ரீப்ரியாவின் தாயார் தயாரிப்பார்: விட்டலாசாரியா ஒரு ரியலிஸ படத்தை எடுப்பார். ஆனால் இப்படங்களுக்கு அவ்வளவாக மக்களிடை வரவேற்பு இருக்காது.



கமலஹாசன், ஸ்ரீதேவி நடிக்கும் உத்தமபுத்திரன் படத்தை ஸ்ரீதர் கதை வசனம், எழுதி டைரக்ட் செய்வார். முழுக்க முழுக்க செட் போட்டே எடுக்கப் படுவது இப்படத்தின் புதுமையாக இருக்கும்.

'பட்டணத்திற்கு வந்த மாட்டு வண்டி' என்ற படத்தையாவது 'கிராமத்திற்குப் போன காடிலாக்' என்ற படத்தையாவது பாரதிராஜா டைரக்ட் செய்வார். இதில் இரண்டு பாடல்கள் முழுக்க முழுக்க ஆங்கிலத்திலேயே இருக்க, இளையராஜா இங்கிலீஷ் டியூனில் இசை அமைப்பார். இந்தப் பாடல்களுக்கு பத்மா சுப்பிரமணியத்தை நடனம் ஆடச் செய்ய முயற்சி மேற்கொள்ளப்படும்.







சிவாஜி கணேசனின் 'டாக்டர் சிவநாத்', 'இஞ்சினியர் ராமநாத்', 'டைரக்டர் விசுவநாத்,' 'மினிஸ்டர் மேக நாத்,' 'எடிட்டர் ஏகநாத்' ஆகிய படங்கள் வெளியாகும். சசனுவின் பிரபல ஸ்னாப் - பாய் வீ - ஜெஞ் இரண்டு படங்களில் ஸ்னாப் அடிக்கக் கூடும்.

'அக்ரஹாரத்தில் கழுதை' அவார்ட் பெற்றதைத் தொடர்ந்து 'தளிகை அறையில் தவளை' படம் எடுக்கப்படும். ஆனால் அவார்டைத் தட்டிக் கொண்டு போகும் படம் 'பக்கத்தாத்தில் பன்றி' யாக இருக்கலாம்.



Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

# மேலும் பல கோப்பைகள் சிறந்த ஸ்ட்ராங்கான டீ

என் குடும்பத்திற்கு
மேலும் பல
கோப்பைகள் சிறந்த
ஸ்ட்ராங்கான டீ
கிடைக்கின்றன--
ரூபிக்கு நன்றி.






**லிப்டன்**
**ரூபி**
**டஸ்ட்**

LRDC/CAS-1/78 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு